உ

முருகமயம்

KOVILOOR ANDAVAR LIBRARY, KOVILOOR
A. No. 25957.

# கந்தரநுபூதி

திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளை அவர்கள்,

சிந்துபூந்துறை, திருநெல்வேலி.

## முன்னுரை.

கந்தாநுபூதி என்ற சொற்றொடர், கந்தர் அநுபூதி என்னும் இரண்டு வடமொழிச் சொற்களாலாகியது. கந்தர் என்றசொல் முருகக் கடவுளாகிய அறுமுகக் கடவுளைக் குறிக்கும். ஆறுமுகங்களும் பன்னிரு கைகளுமாகிய வேறு வேறு வடிவமாய் சரவணப் பொய்கையிலிருந்த ஆறுவடிவங்களையும் உமாதேவியார் இறைவனது ஆணைப்படி தமது திருக்கைகளா லொன்று சேர்த்து ஒருவடிவமாயாக்கிய காரணத்தால் அறுமுகக் கடவுளுக்கு சேர்க்கப்பட்டவர் என்று பொருள்படுகிற கந்தர் என்ற பெயர் வழங்கலாயிற்று. (கந்த புராணம் சரவணப்படலம் உக-வதுபாட்டு.) அநுபூதி என்ற சொல் ஒன்றுதலென்று பொருள்படும். அநு-உடன், பூதி-ஆதல். ஈண்டு அச்சொல் ஆன்மா, கந்தக்கடவுளோ டத்து விதமாய்ச் சேர்ந்து ஒன்றுதலா லுண்டாகும் அநுபவ ஞானம்; அதாவது மெய்யறிவைக் குறிக்கிறது. அருணகிரி நாதர் இந்நூல் 43-வது பாட்டில் "ஆசாநிகளந்துகளாயின பின், பேசா அநுபூதி பிறந்ததுவே" என்று கூறுதலாலே மண்முதல் நாதமீறுயுள்ள முப்பந்தாறு தத்துவங்களில் சுத்தமாயையின்கண் முப்பத்தாறும் தத்துவமாகிய நாதமாத்திரையில் ஒளிமயமாய் விளங்கும் சூக்குமை வாக்கும் பாசஞானத்தின் கட்படுதலால், அப் பாச ஞானத்தையும் அதற்கப்பால் விளங்கும் நான் பிரமம் என்னும் பசு ஞானத்தையும் கடந்து விளங்குகிற பதிஞானம் ஆகிய மெய்யறிவை இந்த அநுபூதி குறிக்கிறது என்றறிக. வட

மொழிச் சிவஞானபோதம் பத்தாவது சூத்திரத்தின் ஈற்றில் "சுவாநுபூதிமான்" என்ற வடமொழிச்சொல் இந்த மெய்யறிவுடையவரைக் குறிக்கிறது. இந்த மெய்யறிவே சிவபோகமாகிய பேரின்பத்துக்கு ஏதுவாயுள்ளது. கந்தாநுபூதி என்ற தொடர்மொழி கந்தரைச்சேர்ந்து அடையும் அநுபூதி என இரண்டாம் வேற்றுமை உருபும், பயனும் உடன் தொக்க தொகைநிலைத் தொடராயும், கந்தராலடையும் அநுபூதி என மூன்றும் வேற்றுமை உருபும், பயனுமுடன் தொக்க தொகைநிலைத் தொடராயும், கந்தரின்கண் அடையும் அநுபூதி என ஏழாம் வேற்றுமை உருபும் பயனுமுடன் தொக்க தொகைநிலைத் தொடராயும் விரியும். இவை ஒவ்வொன்றின் பொருளையும் கருதுவாம்.

கந்தரைச் சேர்ந்து அடையும் அநுபூதி என்பது இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் அடைந்த அடியார் ஒருவர், எல்லாவுயிர்களும் தம்மைப்போல இன்பமடைதல் வேண்டுமென்றும் கந்தக்கடவுளுடைய கருத்துக்கு இணங்க அவரை அன்புடன் வழிபட்டு தாம்வேறு கந்தக்கடவுள்வேறு என்னாது உடலுமுயிரும்போல அவரோடு கலந்து ஒன்றுபட்ட அத்துவித நிலையைக் குறிக்கும். கந்தராலடையும் அநுபூதி என்பது அங்ஙனம் ஒன்றுபட்ட அத்துவித நிலையை யடைந்தவருக்கு கந்தக்கடவுள், ஞாயிற்றின் ஒளியும் கண்ணொளியும் போல அவரின் வேறாய் நின்று தம்மை யறிவித்துக் காட்டு முதவி செய்து பொருளால் வேறாய் நிற்கிற அத்துவித நிலையைக் குறிக்கும். கந்தரின்கண் அடையும் அநுபூதி என்பது அங்ஙனம் வேறாய் நின்று அறிவித்து காட்டு முதவிசெய்யப் பெற்றவரைக் கந்தக்கடவுள் உயிரறிவும்கண்ணொளியும்போல தம்மோடு உடனாய்நின்றுஞ் செயலிலுஞ் செலுத்திக் காணு முதவி செய்து உடனாய் நிற்கிற அத்துவித நிலையைக்குறிக்கும். இங்ஙனம் கந்தாநுபூதி என்ற தொகைநிலை சொற்றொடர் மூவகைத் தொகைநிலைத் தொடர்களாய் விரிந்து பக்குவமடைந்த அடியார் ஒவ்வொருவரும் கந்தக்கடவுளும் கலப்பினு லொன்றுபட்டு நிற்கும் அத்துவித நிலையையும் பொருளாற்கந்தக்கடவு ளவருக்குவேறாய்நின்றுகாட்டுமுதவியைச் செய்யும் அத்துவித நிலையையும் செலுத்தி நிற்குந் தன்

மையால் கந்தக்கடவுள் அவரோடுடனாய்நின்று காணுமுதவியைச் செய்யும் அத்துவிதநிலையையும் குறித்து அம்மூவகை அத்துவித நிலைகளாலும் அவர் அடையும் அநுபூதியாகிய மெய்யுணர்வைக் குறித்தல் காண்க. "அருவமுமுருவுமாகி யநாதியாய்ப் பலவாயொன்றாய்ப் -- பிரமமாய்நின்ற சோதிப்பிழம்பு" ஆகியசிவமே "கருணைகூர் முகங்களாறும் கரங்கள்பன்னிரண்டும்" கொண்ட கந்தக்கடவுளா யுலகமுய்ய அவதரித்தலால் கந்தரநுபூதி என்பது சிவாநுபூதியினின்றும் வேறல்ல என்பதறிக.

கந்தரநுபூதி என்பதிங்கே அத்தகைய மெய்யுணர்வைப் பற்றிக்கூறும் நூலுக்குப்பெயராய் அன்மொழித் தொகையாய் வந்தது.

காப்பு

நெஞ்சக் கனகல் லுநெகிழ்ந் துருகத்
தஞ்சத் தருள்சண் முகனுக் கியல்சேர்
செஞ்சொற் புனைமா லைசிறந் திடவே
பஞ்சக் கரவா னைபதம் பணிவாம்.

பதவுரை:

தஞ்சத்து - அடியார், (நீயே எனக்குப் புகல்) வேறுபுகலில்லை என்று கூறி ஏத்தும் பொழுது
அருள்சண்முகனுக்கு - அவர்களுக்குத் தாங்கள் வேண்டியவாறு அருள் செய்கின்ற கந்தக் கடவுளுக்கு
கனகல் நெஞ்சமும் - ஓதுவார்கேட்பார்களுடைய கடினமான கல்லுப்போலுள்ள இளகாத நெஞ்சமும்
நெகிழ்ந்துருக - கரைந்துருகும்படி
இயல்சேர் - இயற்றமிழுக்குச் சேர்ந்த
செஞ்சொல் புனைமாலை - நலமுடைய சொற்களாகிய மலர்களாலே அன்பென்னும் நாரிலே கையாகிய வாயாலே அழகாகத் தொடுக்கப்பட்டபூமாலை போன்ற இந்தப் பாமாலையாகிய கந்தரநுபூதி நூலானது
சிறந்திடவே- (யாதானுமோரிடையூறின்றி இனிது முடியவும்) முடிந்தபின்உலகில் மக்கள் ஓதி கந்தக் கடவுளுடைய அருளைப் பெறுதலால் சிறப்பாக விளங்கவும்
பஞ்சக்கர ஆனைபதம் - ஐந்து திருக்கைகளை யுடைய யானைமுகக் கடவுளது இரண்டு திருவடிகளையும்
பணிவாம் - நாம் வணங்குவாம்.

குறிப்பு:-

பதவுரையில் வைக்கப்பட்ட சொற்களின் வரிசையே உரைநடையாகும். பதங்களுக்கு நேரே வலதுகைப் பக்கம் எழுதப்பட்ட சொற்களைத் தொடர்ச்சியாக ஓதின் பொழிப்புரையாகும். பின்வருகிற ஒவ்வொரு பாட்டுக்கும் இவ்வாறு கொள்க.

விளக்கவுரை:

தஞ்சத்து-தஞ்சம் (புகல்) அத்து (சாரியை)
தஞ்சம்-கூறும்பொழுது.
செஞ்சொல் புனைமாலை-செஞ்சொல்லாற் புனையப்பட்ட மாலை எனவிரியும். செம்மை ✣ சொல்-செஞ்சொல். செம்மை-நேர்மை, நன்மை.

செஞ்சொல் கந்தக்கடவுளுடைய திருவடிகளை அடைவிக்கும் நலம் தரும் சொற்கள். புனைதல் - அழகுபெறத் தொடுத்தல். மாலைஎன்பது உருவகம். கந்தரநுபூதி நூலைக் குறிக்கிறது. கந்தக் கடவுளுடைய திருவடிகளி லணியப்படும் பூமாலைபோன்று கந்தரநுபூதி யிருத்தலின் அது மாலை எனப்பட்டது. உருக என்னும் செய்ய என்ற வாய்பாட்டு வினையெச்சம் புனை என்ற வினையைக் கொண்டு முடிந்தது. காரியப்பொருளில் வந்தது. சிறந்திட என்றும் செய்ய என்றும் வாய்பாட்டு வினையெச்சம் பணிவாம் என்ற வினைமுற்றைக் கொண்டு முடித்தது.

யானைமுகக் கடவுளுடைய ஐந்து திருக்கைகளும் ஐந்து மூர்த்திகளுடைய ஐந்து தொழில்களையும் செய்தலைக் குறிக்கின்றன. எழுத்தாணி யிருக்கிற திருக்கை படைப்புத்தொழிற் செய்தலையும், மோதகம் வைத்திருக்கிற திருக்கை காத்தல்தொழில் செய்தலையும், யானைத் தோட்டி வைத்திருக்கிற திருக்கை அழித்தல் தொழில் செய்தலையும், பாசம் வைத்திருக்கிற திருக்கை மறைத்தற்றொழில் செய்தலையும், துதிக்கை அருள் ஆகிய தொழில் செய்தலையும் குறிக்கின்றன. ஆனைமுகக் கடவுளுடைய ஐந்து திருக்கைகளும் சிவபெருமானுடைய ஐந்தொழில்களையும் செய்கிற அடையாளங்களை உடைமையால் அவர் சிவபெருமானின்றும் வேறல்லர் என்பதுபோதரும்.

## நூல்

(1) ஆடும் பரிவே லணிசே வலெனப்
பாடும் பணியே பணியா வருள்வாய்
தேடுங் கயமா முகனைச் செருவிற்
சாடுந் தனியா னைசகோ தரனே.

(ப-ரை)

தேடுங்கயமாமுகனை - (துன்புறுத்தும்படி தேவர்களை) தேடிச் செல்கின்ற கயமுகாசுரனை
செருவில்சாடும் - (அவனோடு போர் செய்து போர்க்களத்தில்) தாக்கிவென்ற
தனியானை சகோதரனே - ஒப்பற்ற ஆனைமுகக் கடவுளுடைய தம்பியாராகிய ஆறுமுகக் கடவுளே!
ஆடும் பரி (யென-உம்) - (கார்கால மேகத்தைக் கண்டு களித்து) ஆடுகின்ற மயிலெனவும்
வேல் (என-உம்) - வேல் எனவும்
அணிசேவல் என உம் - அழகிய சேவலெனவும்
பாடும் பணியே - (நான் எப்பொழுதும் என் மனத்தில் உருகி நினைந்து அங்ஙனம் நினைந்ததன் பயனாக என் வாயினாலே எப்பொழுதும் சொல்லிக் கொண்டு உனது புகழைப்) பாடும் செயல் ஒன்றனையே
பணியா(க) அருள்வாய் - உனக்கு நான் செய்யும் தொண்டாகச் செய்யும்படி அருள் செய்தல் வேண்டும். 'நான் இங்ஙனம் தொண்டு செய்தால் உனது திருவடிப்பேறு அடைவேனென்பது குறிப்பெச்சம்.'

(வி—ரை.) கயமுகாசுரன் என்னும் அசுரன், தங்களுக்குச் செய்யும் துன்பத்தினின்று நீக்கிக் காத்தருளும்படி தேவர்கள் தன்னை வேண்டிய பொழுது, சிவபெருமான் யானைமுகக் கடவுளைத் தேவர்களுடைய இடுக்கணை நீக்கும் பொருட்டுத் தோன்றும்படிச் செய்தார். யானைமுகக் கடவுள் கயமுகாசுரனைப் போர்க்களத்திலெதிர்த்து வென்றபொழுது சிவபெருமானிடம் அவன் சாகா வரம் பெற்ற காரணத்தால் பெருச்சாளி உருவமாய் வந்த பொழுது அப் பெருச்சாளியை

ஊர்தியாகக் கொண்டருளினர். இந்நிகழ்ச்சிக்குப் பின் சூர பன்மன் என்னும் அசுரன் தேவர்களுக்குச் செய்த துன்பத்திலிருந்து நீக்குதற்குச் சிவபெருமான் அறுமுகக் கடவுளைத் தமது ஆறு நெற்றிக் கண்களிலிருந்தும் தோற்றுவித்ததால் ஆறுமுகக் கடவுள் யானைமுகக் கடவுளுக்குத் தம்பியாராயினர். அது பற்றி ஆசிரியர் அறுமுகக் கடவுளைத் தனியானை சகோதரனே என்று விளித்தார். பரி என்பது குதிரை. ஆடும் பரி என்றதனாலே மயில் குறிக்கப் பட்டது.

அறுமுகக் கடவுள் சூரபன்மனோடெதிர்த்துப் போர் செய்து தம் கையிலிருந்த வேற் படையை விட்டு மா மரமாய் வந்த சூரனை இரு கூறாக்கினர். சூரபன்மன் மறுபடியும் தனது தொல்லுருவங் கொண்டு அறுமுகக் கடவுளுடைய வேற்படையை எதிர்த்த பொழுது, வேற்படையானது அவனுடைய உடலை இரு கூறுகளாகும் படி செய்தது. சிவபெருமானிடம் சூரபன்மன் சாகா வரம் பெற்றிருந்த காரணத்தால் அவ்விரு கூறுகளும் மயிலாகவும் சேவலாகவும் அறுமுகக் கடவுள் முன்னே வந்தன. அப்பொழுது அறுமுகக் கடவுள் மயிலைத் தாம் ஏறிச் செல்லும் ஊர்தியாகக் கொண்டு அதன் மேல் அமர்ந்தருளியும், சேவலைத் தான் செல்லும் தேரில் கட்டுகிற கொடியாகக் கொண்டும் சூரபன்மனை அடக்கி அருளினர். மயில் ஊர்தியானது ஓங்கார வரிவடிவத்தையும், வேற்படையானது ஞான சக்தியையும், சேவலானது நாதத்தையும் குறிக்கின்றன. அறுமுகக் கடவுள் மயிலைத் தான் ஏறிச் செல்லும் ஊர்தியாகக் கொண்டது சூரபன்மனுடைய மாயை மலத்தைக் கெடுத்தலையும், சேவலைத் தேர்க் கொடியாகக் கொண்டது அவனுடைவினை மலத்தைக் கெடுத்தலையுங் குறிக்கின்றன. வேற்

படையானது சூரபன்மன் உடலிலிருக்கிற உயிரைத் தீண்டுதலானது அவனுடைய ஆணவ மலத்தைக் கெடுத்தலைக் குறிக்கிறது. இங்ஙனம் சூரபன்மன் அறுமுகக் கடவுளுடைய வேலினுலும், அவர் ஊர்தியாக ஏறும் மயிலினுலும், அவருடைய தேர்க் கொடியாகிய சேவலினுலும் முறையே அவன் ஆணவம், மாயை, வினை மலங்களிலிருந்து நீங்கித் தூய்மை பெற்று, அறுமுகக் கடவுளுடைய திருவடிப் பேறு அடைந்தான். ஆதலின் ஒருவர் வேலையும், மயிலையும், சேவலையும் அவை குறிக்கும் உண்மைகளையறிந்து யாதொரு பற்றின்றி எப்பொழுதுங் கூறி அறுமுகக் கடவுளைத் துதித்து அவருடைய திருவடிகளை மெய்யன்போடு வணங்குவாராகுல் அவர் முருகக் கடவுளோடு ஏகனுகி மும் மலங்களினின்றும் நீங்கி அறுமுகக் கடவுளுடைய திருவடிகளை அடைவர். இவ்வுண்மையை நோக்கி ஆசிரியரும் தாம் எப்பொழுதும் மயிலும், வேலும், சேவலும் என்று கூறிப் பாடும் செயலையே தாம் யாதொரு பற்றின்றி அறுமுகக் கடவுளுக்குச் செய்யும் தொண்டாக விதிக்கும்படி அவரை இச்செய்யுளில் வேண்டிக் கொள்கிறுர். இது அறுமுகக் கடவுளுடைய திருவடிகளை அடைய விரும்பும் அன்பர்களுக்கு ஆசிரியர் அறிவுறுத்தும் அறிவுரையுமாகும்.

"அவனே தானே யாகிய வந்நெறி
ஏகனுகி யிறைபணி நிற்க
மலமாய தன்னேடும் வல்வினையின்றே" என்று

சிவஞான போதம் 10-வது சூத்திரத்தில் இவ்வுண்மை கூறப்பட்டிருத்தல் காண்க.

ஆசிரியர் கந்தரலங்காரம் 30-வது பாட்டில்

* * * "செந்திலோன் திருக்கை
வேலென்கிலைகோற்ற மயூரமேன்கிலை வெட்சித்தண்டைக்
கால் என்கிலை மனமே எங்ஙனே முத்தி காண்பதுவே"

— * —

(2) உல்லா சநிரா குலயோ கவிதச்
சல்லா பவிநோ தனுநீ யலையோ
வெல்லா மறவென் னையிழந் தநலஞ்
சொல்லாய் முருகா சுரபூ பதியே.

(ப---ரை.)

நிராகுலனும் - கலக்கமில்லாதவனும், அதாவது அமைதியுள்ளவனும்,
யோகனும் - முற்றறிவுடையவனும்
உல்லாசனும் - இன்பமுடையவனும்
இதனும் சல்லாபனும் விநோதனும் - அடியார்க்கருளுமின்பத்தை நினைக்கிறவனும், பேசுகிறவனும் எளிதாகச் செய்கிறவனும்,
நீ அலையோ - நீயல்லவா, அதாவது நீதான். (ஆதலினாலே)
முருகா - முருகக் கடவுளே!
சுரபூபதியே - விண்ணுலகிற்கும் மண்ணுலகிற்கும் தலைவனே
எல்லாம் அற - என்றன் உடல், உடைமை, உயிர் ஆகிய மூன்றினையும் நான் நின்னிடம் ஒப்புவித்து அவற்றின் பற்று முற்றிலும் என்னை விட்டொழிய
என்னை இழந்த நலம் - யான் எனதென்னும் செருக்கை நான் நீங்கினதினாலே உண்டாகிய பேரின்ப நலத்தை அடைதற்கேதுவாய ஒரு சொல்லை
சொல்லாய் - (நான் நின்னோடத்துவிதமாய்க் கலந்து நின்று உணரும்படி என்னுள்நின்று உணர்த்தியருளாய்.
இங்ஙனம் ஒருசொல்லை நீ எனக்குச் சொல்லியருளுவாயானால் நான் என்னுள் நினைந்து எனது பிறப்பறுத்துப் பேரின்பமடைவேனென்பது குறிப்பெச்சம்.

(வி—ரை) உல்லாச நிராகுல யோக விதச் சல்லாப விநோதனும் நீ என்றது உல்லாசனும் நீ, நிராகுலனும் நீ

யோகனும் நீ, இதனும் நீ, சல்லாபனும் நீ, விநோதனும் நீ என விரித்துப் பொருளுரைக்க. இது வடமொழி இலக்கணச் சொல் முடிவு போலும். நிராகுலன் என்பது முருகனது சத்து சொரூபத்தையும் (உண்மை சொரூபத்தையும்,) யோகன் என்பது அவனுடைய சித்து சொரூபத்தையும், உல்லாசன் என்பது அவனுடைய ஆனந்த சொரூபத்தையும் (இன்ப சொரூபத்தையும்) குறிக்கின்றன. முருகன் சச்சிதானந்தப் பொருள் என்பது கருத்து. சத்து, சித்து, ஆனந்தம், என்னும் முறைமைக்கேற்ப நிராகுலன், யோகன், உல்லாசன் என உரை செய்யப் பட்டது. அமைதி என்று பொருள் படுகிறநிராகுலமானது முப்பத்தாறுதத்துவங்களையுங் கடந்த தூவெளியாகிய சத்து சொரூபத்துக்கு உடையதாதலின் நிராகுலன் என்ற சொல், முருகன் சத்து சொரூபன் என்ற கருத்தை உணர்த்துகின்றதென்பது கூறப் பட்டது. யோகம் என்பது அத்துவிதக் கலப்பு. அது இங்கே உயர் முருகனோடு அத்துவிதமாய்க் கலத்தலினு லுண்டாகிய முற்றறிவைக் குறிக்கிறது. திருவாசகம் பிடித்த பத்து முதலாவது பாட்டில் வரும் "ஒழிவற நிறைந்த யோகமே" என்ற சொற்றொடரில் யோகம் என்பது முற்றறிவைக் குறித்தல் காண்க. உல்லாசம் என்பது முருகனுடைய ஆனந்த சொரூபத்தைக் குறிக்கிறது. ஆகவே நிராகுலன், யோகன், உல்லாசன் என்ற மூன்றும் முருகனுடைய சிறப்பியல்பாகிய சச்சிதானந்த சொரூபன் என்பதைக் குறிக்கிறது. இதம் - நன்மை. அது இங்கே எல்லா நன்மைகளினும் மேலாகிய பேரின்ப நலத்தைக் குறிக்கிறது. இதன் - அடியார்களுக்கு அருளுவதாகிய பேரின்ப நலத்தை நினைக்கிறவன். சல்லாபன் - அப்பேரின்ப நலத்தைப் பேசுகிறவன். விநோதன் - அப்பேரின்ப நலத்தை விளையாட்டுப் போலச் செய்கிறவன்; சங்கரன் என்ற சொல்

போல. ஆகவே இதன், சல்லாபன், விநோதன் என்பன மூன்றும் மாந்தருயிர்களோடு அத்துவிதமாய்க் கலந்து நின்று அவர்களுக்குப் பேரின்பம் அருளுதலை நினைக்கிறவன், பேசுகிறவன், செய்கிறவன் என்கிற முருகனுடைய பொது வியல்பைக் குறிக்கிறது. முருகன் தன்னை வணங்கும் அன்பர்களுக்குப் பேரின்பம் அருளுதலை அவர்கள் உள்ளத்தில் ஒன்றாய் நின்று நினைத்தலினாலே அவர்கள் அதனை நினைத்தலும் வேறாய் நின்று அவர்களோடு பேசுதலினாலே அவர்கள் அதனைப் பேசுதலும், அவர்களோடுடனாய் நின்று செய்தலினாலே அவர்கள் அதனை தவஞ் செய்து அடைதலும் உண்டாகின்றன. ஆதலால் ஆசிரியர் முருகனை இதன், சல்லாபன், விநோதன் என்று கூறினார். இங்ஙனம் முருகனுடைய மூவகைச் சிறப்பியல்பும், மூவகைப் பொதுவியல்பும் ஆசிரியர் பின்னேதாம் கூறுகிற "எல்லாம் அற என்னை இழந்த நலம் சொல்லாய்" என்பதற்குக் காரணங்களாகக் கூறப் பட்டன. முருகனுடைய பொதுவியல்பு மாந்தருடைய உலகவாழ்வில் அவர்கள் மலக்கட்டு நீங்கிப் பேரின்ப மடைதற்கு பக்குவமாதற் பொருட்டு ஐந்தொழில் செய்தற்கு வேண்டப் படுதலாலும், அவனுடைய சிறப்பியல்பு அங்ஙனம் பக்குவ மடைந்த மாந்தர்க்குப் பேரின்ப மருளுதற்கு வேண்டப் படுதலாலும் இருவகை இயல்புகளும் காரணங்களாகக் கூறப்பட்டன. முருகு - இளமை. முருகன் என்னும் இளமைப் பருவத்தை யுடைய கடவுள்; அதனால் திருநாவுக்கரசு அடிகள் தமது தனித் திருநேரிசைத் தேவாரப் பதிகம் 4-வது பாட்டில் முருகக் கடவுளை "கடம்பமர் காளை" என்று கூறியருளினார். சுரபூபதி என்பது, சுரபதி, பூபதிஎன விரியும். சுரபதி என்பது முருகன் தேவலோகத் துக்குத் தலைவனாய்த் தேவர்களைக் காப்பவ னென்றும், பூபதி

என்பது பூலோகத்திற்குத் தலைவனாய் பூலோகத்திலுள்ள மாந்தர்களைக் காப்பவனென்றும் பொருள்படும். எல்லாம் அற என்பதில் எல்லாம் என்பது உடல், பொருள், உயிர் மூன்றையுங் குறிக்கிறது. அறுதல் - முற்றிலும் ஒழிதல்; இறைவனிடமிருந்து கடனாகக் கொண்ட உடல் பொருள் உயிர் மூன்றினையும் உயிர் இறைவனிடம் ஒப்புவித்தாலொழிய பேரின்ப நலமடைதற்கு ஏதுவாகிய யான், எனது என்னும் செருக்கு நீங்காதாதலின் எல்லாம் அற என்னை இழந்தநலம் என்றார். மாணிக்க வாசக அடிகள், திருவாசகம், குழைத்த பத்து 7வது பாட்டில், "அன்றே யென்ற னாவியு முடலு முடைமை யெல்லாமுங் குன்றே யனையா யென்னையாட் கொண்ட போதே கொண்டிலையோ" என்று கூறியருளி யிருத்தலையும், திருமூலர் திருமந்திரம் 1595வது பாட்டில் "காச்சற்ற சோதி கடன்மூன்றுங் கைக் கொண்டு வாச்ச புகழ்மாளத் தாள் தந்து மன்னுமே" என்று கூறியிருத்தலை யும் நோக்குக. இழந்த நலம் - இழத்தலினா லுண்டாகிய பேரின்ப நலம்; காரண காரியப் பொருளில் வந்தது நலம். சொல்லாய் என்பது நல மடைதற் கேதுவாய சொல்லைச் சொல்லாய் என விரிந்து பொருள்தரும். சொல் என்பது இங்கே ஒடுக்கப் பிரணவமாகிய ஓரெழுத் தொருசொல். இச் சொல்லைப் பற்றி திருமூலர், திருமந்திரம் 2676வது பாட் டில் 'ஓமெனும் ஓங்காரத் துள்ளே யொரு மொழி' யென்றும் 2720வது பாட்டில்

"அங்கமும் ஆகம வேதமதோதினும்
எங்கள் பிரா னெழுத்தொன்றில் இருப்பது
சங்கைகெட் டவ்வெழுத் தொன்றையுஞ் சாதித்தா
லங்கை சேர்ந்த வருங்கல மாமே"

என்றும், 2648வது பாட்டில் "உரையற்ற தோன்றை உரைத்தான் எனக்கு" என்றும் கூறியருளினர்; மாணிக்கவாசக அடிகள் திருவாசகம் செத்திலாப்பத்து, 2-வது பாட்டில் "என்னை போர் வார்த்தையுட் படுத்துப் பற்றினய்" என்றும், பண்டாய நான்மறை 7-வது பாட்டில் "பேசும் பொருளுக் கிலக்கிதமாம் பேச்சிறந்த மாசின் மணியின் மணிவார்த்தை பேசிப் பெருந்துறையே பென்று பிறப்பறுத்தே னல்ல மருந்தினடி யென்மனத்தே வைத்து" என்றும் கூறியருளினர்; குமரகுருபர அடிகள் கந்தர் கலிவெண்பாவில் "மறையாதி யெழுத்தோன்று கந்த பிரணவத்தினுண்மை புகன்றிலையால்" என்றும், தாயுமான அடிகள், ஆனந்தக் களிப்பில் "அவன் சொல்லாத வார்த்தையைச் சொன்னாண்டி தோழீ" என்றும் கூறியருளினர். இச்சொல் மேலே கூறியபடி 'உரையற்ற தொன்றும்' 'பேச்சிறந்த மணிவார்த்தையாயும்' 'சொல்லாத வார்த்தையாயும்,' இருத்தலால், சொல்லாய் என்பதற்கு என்னுள் நின்றுணர்த்தி யருளாய் என்று பதவுரையில் பொருள் கூறப்பட்டது.

— * —

(3) வானோ புனல்பார் கனன்மா ருதமோ
ஞானோ தயமோ நவினான் மறையோ
யானோ மனமோ வெனையாண்ட விடந்
தானோ பொருளா வதுசண் முகனே.

(ப—ரை)

சண்முகனே - அறுமுகக் கடவுளே
பொருளாவது - (மேலைச் செய்யுளிற் கூறியபடி) நீ சச்சிதாநந்தப் பொருளாயிருப்பது
பார் (ஒ) - மண்ணன்று
புனல் (ஒ) - நீரன்று
கனல் (ஒ) - தீயன்று
மாருதமோ - காற்றன்று
வானோ - வானன்று (ஆகாயமன்று)
மனமோ - மனமன்று
ஞானோதயமோ - உலகவறிவு பிறக்கு மிடமன்று. (அதாவது புத்தி தத்துவமன்று)
நவில் நான்மறையோ - நாவினால் ஓதப்படுகின்ற நான்கு வேதங்களு மன்று
யானோ - நானாகிய புருட தத்துவமன்று
எனையாண்ட இடமோ - என்னை ஆண்ட இடமுமன்று (அதாவது தெளிவுறு ஞானத்துச் சிந்தையு மன்று)
[இவை யாவையுங் கடந்து நின்ற நீ, கருவி யறிவினாலும் (பாசஞானத்தினாலும்) உயிரறிவினாலும் (பசுஞானத்தினாலும்) அறியப்படாமல் ஒருவர் தன்னோடத்து விதமாய்க் கலந்து நின்று மெய்யறிவினாலே (பதிஞானத்தினாலே) உணரப்படும் பொருளா யிருக்கிறாய் என்பது குறிப்பெச்சம்.]

(வி---ரை)

சண்முகன் என்பது நான்கு திக்குகளினும், மேலும் கீழும் ஆகிய ஆறு பக்கங்களிலும் ஆறு முகங்களை யுடையவன். மக்களுடைய முகத்தில் புறப்பொருளை நோக்கி யறியும் செவி, மெய், கண், வாய், மூக்கு என்னும் ஐம் பொறிகளும் (ஞானேந்திரியங்களும்) இருப்பன வாதலின் எல்லாப் பக்கங்களிலுமுள்ள ஆறு முகங்களுடைமை முருகன் எங்கும் நிறைந்து வியாபகமா யிருந்து எல்லா மறிபவனென்ற கருத்தை விளக்குகின்றது. இதனாலே அவன் அறிவுருவனென்றும், ஞானபண்டித னென்றும் கூறப்படுகின்றான். உயிர்களுக்கு அருள் செய்யும் பொருட்டு முருகன் கொண்ட ஆறு திருமுகங்களும் (1)தன்வயத்தனாதல் (2)இடல்பாகவே

பாசங்களினீங்குதல் (3) முற்று முணர்தல் (4) பேரரு ளுடைமை (5) வரம்பிலின்பமுடைமை (6) முடிவிலாற்ற லுடைமை. என்னும் இறைவனுடைய ஆறு அருட்குணங் களையும் குறிக்கும்.

ஏவர்தம் பாலு மின்றி யெல்லைதீ ரமலற் குள்ள
மூவிரு குணனுஞ் சேய்க்கு முகங்களாய் வந்த தென்னப்
பூவியல் சரவ ணத்தண் பொய்கையில் வைகு மைய
னுவிக ளருளு மாற்று லறுமுகங் கொண்டா னன்றே.

என்று கந்தபுராணம், திருவவதாரப் படலம் 94வது பாட்டுக் கூறுதல் காண்க. என் குணங்களாகக் கூறு மிடத்து எஞ்சி நிற்பனவாகிய இயற்கை யுணர்வினனாதல், இயல்பாகவே பாசங்களி னீங்குதலினும், தூய வுடம்பின னாதல் பேரருளுடைமையினும் அடங்குவனவாகும். இந்த ஆறு அருட் குணங்களும் சத்து (உண்மை) சித்து (அறிவு) ஆனந்தம் (இன்பம்) என்ற மூன்று அருட் குணங்களினும் அடங்கும். தன்வயத்தனாதல் சத்திலும், இயல்பாகவே பாசங்களினீங்குதல், முற்றுமுணர்தல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை நான்கும் சித்திலும், வரம்பிலின்ப முடைமை ஆனந்தத்திலும் அடங்குவனவாகும். ஆகவே ஆசிரியர் இங்கே சண்முகன் என்று முருகனை விளித்தது தாம் கூறுகின்ற, பாரன்று நீரன்று முதலியனவாக இச்செய்யு ளில் கூறப்படுகின்ற சிறப்பியல்பிலக்கணங்களுக்குப் பொருத்தமாயிருக்கும் பொருட்டாகும். பார், புனல், கனல், மாருதம், வான் ஐந்தும் ஐந்து பூதங்களாகிய தூல தன் மாத்திரைகளையும் அவற்றிற்குக் காரணங்களா யுள்ள சூக் கும தன்மாத்திரைகளையும் குறிக்கும். செய்யுளாதலின்

அவை முறை பிறழ்ந்து கூறப்பட்டன. பார், புனல், கனல், மூன்றிற்கும் ஓ, இடைச்சொல் விரித்துரைக்க. ஓ, இடைச் சொல் இங்கே எதிர்மறைப் பொருளை புணர்த்தி நின்றது. அதாவது மண்ணன்று, நீரன்று, தீயன்று, காற்றன்று, வானன்று என்பது பொருள். இவ்வாறே மனம், ஞானோ தயம், மறை, யான், ஆண்டவிடம் என்னும் சொற்களுக்குப் பின் வருகிற ஓ இடைச் சொற்களுக்கும் பொருள் கொள்க. மனம் என்றது இங்கே ஐம்பொறிகளையும் புறத்தே யுள்ள ஐம்புல நுகர்வின் பொருட்டு ஏவி நடத்தும் காம மனத் தைக் குறிக்கிறது. ஞானோதயம் என்பதிலுள்ள ஞானம் புறப்பொருளை யறியும் உலக வறிவைக் குறிக்கிறது; மெய் யறிவை யன்று. இந்த உலகவறிவு பிறக்குமிடம் பிரகிருதி மாயையிலுள்ள புத்தி தத்துவமாகும். புருடனாகிய உயிரா னது உலகவின்ப நுகர்வை நுகர்தற் பொருட்டு, சாத்துவிக குணம் மிகுந்தும் ஏனைய ராசத, தாமத குணங்கள் குறைந் தும் பரிணமித்துத் தோன்றி, வித்தையிற் பொதுமையான் விளங்கிய ஞானசத்தியை அவ்வவ் விடயந்தோறும் சிறப்பு வகையான் விளக்கி அவற்றைப் பெயர், சாதி, குணம், கன் மம், பொருள் என்பவற்றோடு அறியும் புத்தி தத்துவமா னது சவிகற்பக் காட்சி யறிவுக்குக் கருவியா யிருத்தலால் ஞானோதயம் புத்தி தத்துவம் என்று கூறப்பட்டது. நவில் நான் மறை என்றதனாலே செவிப்புலனுக்குக் கேட்ப தாய் பிரகிருதி மாயையிலுள்ள தூலவைகரி வாக்குக்குச் சம்பந்தப் பட்ட நான்மறை என்பது கூறப் பட்டது. நான் மறைகளும் அபரஞானமாகிய கருவியறிவைத் தருதலால் நவில் நான்மறைகள் என்றார். யான் என்பது உயிரானது காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்னும் தத்துவங்க

ளோடு கூடி அவற்றாலே உலக நுகர்வு நுகர்தற்குத் தகுதி பெற்ற புருடன் என்னும் பெயரால் வழங்கப் படுகின்ற புருட தத்துவத்தைக் குறிக்கிறது. ஆண்ட இடம் என்பது தெளிவுறு ஞானத்துச் சிந்தையைக் குறிக்கிறது. இச்செய்யு ளின் பொருளை விரித்துக் கூறுமிடத்து சண்முகனே, நான் சச்சிதாநந்தப் பொருளாகிய உன்னை, என்னையென்று கூறட் டும்? மண்ணிலே நீ விளங்குகின்றதாலே உன்னை மண் ணென்று சொல்லலாமோ வென்றால் அதனுள்ளடங்காது அதனைக் கடந்தும் நீ இருப்பதினாலே மண்ணன்று என் றும், நீ நீரில் விளங்குதலினாலே நீரென்று சொல்லலாமோ வென்றால் அதனுள்ளடங்காது அதனைக் கடந்தும் இருப் பதனாலே நீரன்று, என்றும் இவ்வாறே பிற தத்துவங்களுக் கும் உரைத்து பொருள் விரித்துரைக்க. இவற்றில் சூக்கும தன்மாத்திரைகளோடு கூடிய மண் முதலிய ஐந்து தூல தன்மாத்திரைகளும், ஞானேந்திரியமாகிய புத்திதத்துவமும், நான்மறையும், மனமும் பிரகிருதி மாயைக்குச் சேர்ந்தன. காலம், நியதி, கலை, வித்தை, அராகம் ஐந்தும் சேர்ந்துள்ள தாகிய புருடதத்துவம் அசுத்தமாயையின் காரியமாத லால் அசுத்தமாயைக்குச் சேர்ந்தது. எனையாண்டவிடம் தானோ என்பதிலுள்ள தான் அசை. எனையாண்டவிடம் என்று ஆசிரியர் குறிப்பது சுத்தமாயையில் விளங்கும் சிந்தை. இந்தச் சிந்தை தாம் முருகனையே எப்பொழுதும் சிந்தித்துக் கொண்டிருக்கும் மேலான தூய அறிவாய் விளங்கும் தத்துவமாதலின் அதனை முருகன் தன்னை ஆண்ட இடம் என்று கூறியருளினர். இது அந்தக் கரணங் களெல்லாம் ஒரு நெறிப்பட்ட இடம்; இதனைத்தம்மை முரு கன் ஆண்ட இடம் என்பது கீழே குறிக்கப்பட்டிருக்கிற

ஆன்றோருடைய அனுபவ வுண்மை உரைகளால் நன்கு விளங்கும்.

(1) சித்தமே புகுந்தெம்மை யாட்கொண்டு
(திருவாசகம், சென்னிப்பத்து 6-வது பாட்டு)

(2) சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அத்தன்
(திருவாசகம், அச்சோப்பதிகம் 1-வது பாட்டு)

(3) செறிவிலேன் சிந்தை யுள்ளே சிவனடி
தெரிய மாட்டேன்
(திருநாவுக்கரசு அடிகள், திருவாவடு துறை
தேவாரப்பதிகம் 7-வது பாட்டு)

(4) * * * சிந்தையுட் சிவனாய் நின்ற
வுருவினைக் கண்டுகொண்ட தென்னுள்ளமே
(திருநாவுக்கரசு அடிகள் தேவாரம், உள்ளத்
திருக்குறுந்தொகை 8-வது பாட்டு)

(5) சிந்தையி னுள்ளே எந்தை திருவடி
சிந்தையும் எந்தை திருவடிக் கீழது
(திருமந்திரம் 2428-வது பாட்டு)

(6) அருள்பெற்ற காரணம் என்கொல் அமரில்
இருளற்ற சிந்தை இறைவனை நாடி
மருளுற்ற சிந்தையை மாற்றி அருமைப்
பொருளுற்ற சேவடி போற்றுவர் தாமே.
(திருமந்திரம் 2599-வது பாட்டு)

(மருளுற்ற சிந்தையென்பது பிரகிருதி மாயைக்குச் சேர்ந்த நான்கு அந்தக் கரணங்களிலொன்று. இதுதான் ஒருவர் அருட்குரவனு லறிவுறுத்தப் பட்டுப் பக்குவ மடைந்தபொழுது அருளொளி நிரம்பப் பெற்றதனாலே அவருடைய சுத்தமாயா வுடலில் விளங்கும் இருளற்ற

தூய சிந்தையாக மாறும். இதுவே இங்கே குறிப்பிடப் படுவது.)

(7) சிந்தை மயக்கமறச் சின்மயமாய் நின்றவுன்னைத்
தந்தவுனக் கென்னையுநான் றந்தேன் பராபரமே.
(தாயுமானவர் பாடல், பராபரக்கண்ணி 329-வது பாட்டு)

(8) சிந்தை மருவித் தெளிவித் தெனையாள
வந்தகுரு நாதனருள் வாய்க்குமோ பைங்கிளியே.
(தாயுமானவர் பாடல், பைங்கிளிக் கண்ணி 23-வது பாட்டு)

இறைவனை யறியும் மெய்யறிவு நான்கு வகைப் படும். அவை, கேட்டலறிவு, சிந்தித்தலறிவு, தெளிதலறிவு, நிட்டையறிவு என்பன. இவை முறையே ஒன்றினுக் கொன்று உயர்ந்தனவாகும். இந்நான்குவகை மெய்யறிவு களும் முறையே சிவஞானபோதம் 8, 9, 10, 11-வது சூத் திரங்களில் கூறப்பட்டுள்ளன. இங்கே குறிப்பிடப்பட்ட தூய சிந்தை மூன்றாவது வகையான தெளிதலறிவு விளங்கு தற் கிடமாயிருப்பது. இத்தெளிதலறிவின் நிலை துரியத்தின் கண்ணுளதாகிய சிவயோகநிலை. இச்சிவயோக நிலையிலுள்ள ஒருவர் தத்துவ சுத்தியும், ஆன்ம சுத்தியும் பெற்று அருளி லடங்கித் தம்மை யறிந்து வியாபக வறி வுடையவராய்ச் சிவத்தைத் தம் சிந்தையிற் காண்பர். இத்துரிய நிலையானது பேதா பேதமாகிய சுத்தாத்துவித நிலையன்றி அபேத சுத் தாத்துவித நிலையன்று. இந்தப் பேதாபேத சுத்தாத்து வித நிலையில் ஒருவர் ஆன்மசுத்தி பெற்றுத் தம்மை யறிந்து அருளிலடங்கிஅவ்வருளில்உடன்விளங்குவதாகியசிவத்தை, காண்பான், காட்சி, காட்சிப் பொருள் என்ற பேதத்துடன் காண்பார். அவர் திருபுடிப் பேதமின்றி சிவனோடிரண்டறக் கலந்து காண்பது துரியாதீத நிலையிலேதான். துரிய நிலையில்

ஒருவருக்கு அறிவு விளக்க முண்டாதலும் அதனாலின்பம் தோன்றுதலு மன்றி இன்பவிளக்க முண்டாகாது. துரியாதீத நிலையிலேதான் இன்பவிளக்க முண்டாகும். ஏனெனில் துரியாதீத நிலையிலேதான் ஆணவமல வலி முற்றிலும் ஒழியும். துரியாதீத நிலையிலுண்டாகிற இன்ப விளக்கமானது சிவஞானபோதம் 11ம் சூத்திரத்தில் கூறப்பட்டுள்ளது. அது ஞானத்தில் ஞானமாகிய நிட்டைஞான நிலை. நான் இங்கே கூறிய கருத்துக்கள் கீழே குறிக்கப் பட்டிருக்கிற ஆன்றோருடைய அனுபவ வுரைகளால் விளங்கும்.

(1) உன்னை யறியா துடலைமுன் னானென்றாய்
உன்னை யறிந்து துரியத் துறநின்றாய்
தன்னை யறிந்தும் பிறவி தணவாதால்
அன்ன வியாத்தன் அமலனென் றறிதியே.
(திருமந்திரம் 2279-வது பாட்டு)

(2) தன்னை யறியா துடலைமுன் தானென்றான்
தன்னை முன்கண்டான் துரியந் தனைக்கண்டான்
உன்னுந் துரியமும் ஈசனோ டொன்றாக்கால்
பின்னையும் வந்து பிறந்திடுந் தானே.
(திருமந்திரம் 2264-வது பாட்டு)

(3) சாக்கிரா தீதத்திற் றானறு மாணவம்
(திருமந்திரம் 2254-வது பாட்டு)

(4) ஆறு றமைந்தாண வத்தையுள் நீக்குதற்
பேறான தன்னை யறிதற்பின் நீர்சுத்தி
(திருமந்திரம் 2509-வது பாட்டு)

(5) சத்திய ஞானத் தனிப்பொருள் ஆனந்தஞ்
சித்தத்தி னில்லாச் சிவானந்தப் பேரொளி
(திருமந்திரம் 2860-வது பாட்டு)

(6) சிந்தையு மென்போலச் செயலற்றடங்கி விட்டால்
வந்ததெலா நின்செயலா வாழ்வேன் பராபரமே.
(தாயுமானவர் பாடல், பராபரக்கண்ணி 325-வது பாட்டு)

(7) சிந்தை மறந்து திருவருளாய் நிற்பவர் பால்
வந்தபொருளெம்மையுந் தான்வாழ்விப் பதெந்நாளோ'
(தாயுமானவர் பாடல் எந்நாட்கண்ணி, பொருளியல்பு
8-வது பாட்டு)

(8) சிந்தை சிதையச் சிதையாத வானந்த
மெந்தை வகையாலே வந்தெய்தும் பராபரமே.
(தாயுமானவர் பாடல், பராபரக்கண்ணி 268-வது பாட்டு)

மேலே கூறியவாறு இருளற்ற தூய சிந்தையானது தெளிவுறும் மெய்யறிவு அறிதற்கிடமா யிருப்பினும் பேரின் பத்திற் கேதுவாய முழுமையான அருட் சத்தி பதியப் பெறும் உயிரினது நிட்டை மெய்யறிவுக்குக் குறைவா யிருத் லால் ஆசியர் சுத்த மாயைக்குச் சேர்ந்த அதனையும் கடைசி யாக முருகனுடைய பொதுவியல்புக்குரிய தத்துவங்களோடு வைத்து அதுவும் முருகனன்று என்று கூறினர். இதனாலே முப்பத்தாறு தத்துவங்கட் குட்பட்டன வெல்லாம் பொது வியல்புக்குரியன வெனஅறிக. முப்பத்தாறு தத்துவங்களை யுங் கடந்து அவற்றிற்கு மேற்பட்ட சச்சிதானந்த சொரு பமே முருகனது சிறப்பியல்பாகும். அச்சிறப் பியல்பை யுணர்ந்தவரே முருகனது திருவடிப் பேற்றினை யடைவர். இந்நூல் 47வது பாட்டில் "ஆறாறையுநீத் ததன்மே நிலை யைப் பேறா வடியேன் பெறுமா றுளதோ" என்று ஆசிரியர் கூறி யருளினர். இச் சிறப்பியல்பு நிலை உருவும், உருவரு வும், அருவும், இல்லாத நிலை. இச்செய்யுளிற் கூறப்பட்ட மண்முதல் தூய சிந்தை வரையுள்ள தத்துவங்கள் உரு, உருவரு, அரு என்ற மூன்றினுக்கும் உட்பட்டவைகள்

இந்த நிலையை ஆசிரியர் இந்நால் 13-வது பாட்டில் "உரு வன் றருவன் றுளதன் றிலதன் றிருளன் றொளியன் றென நின் றதுவே," என்று கூறியருளினர். இந்த 3-வது செய்யுளின் கருத்தை ஆசிரியர் கந்தாலங்காரம் 9-வது பாட்டிலும் "வான் அன்று கால் அன்று தீ அன்று நீர் அன்று மண்ணும் அன்று தான் அன்று நானன்றசரீரி அன்று சரீரி அன்றே" என்று கூறியருளினர். இறைவனது சிறப்பியல்பை திருநாவுக்கரசு அடிகள், திருவொற்றியூர் திருத்தாண்டகம் 9-வது பாட்டில் "மண்ணல்லை விண் ணல்லை வலயமல்லை, மலைபல்லை கடலல்லை வாயுவல்லை, எண் ணல்லை யெழுத்தல்லை யெரியுமல்லை, யிரவல்லை பகலல்லை யாவுமல்லை, பெண்ணல்லை யாணல்லை பேடுமல்லை, பிறிதல்லை யானும் பெரியாய் நீயே, உண்ணல்லை நல்லார்க்குத் தீயை யல்லை உணர்வரிய வொற்றியூ ருடைய கோவே" என்று கூறியருளினர்.

(4) வளைபட் டகைமா தொடுமக் களெனுந்
தளைபட் டழியத் தகுமோ தகுமோ
கிளைபட் டெழுசூ ருரமுங் கிரியுந்
தொளைபட் டுருவத் தொடுவே லவனே.

(ப—ரை)

கிளைபட் டெழுசூர் உரமும் - தன் சேனைகளோடு கூடி போர் செய்ய எழுந்த சூரபன்மனுடைய மார்பையும் கிரியும் - சூரபன்மனுடைய தம்பி தாரகாசுரனை லேவப்பட்டு அறுமுகக்கடவுளுடைய வீரர்களை யெல்லாம் மாயையினாலே மயக்கித் துயிலும்படி செய்த கிரௌஞ்ச அவுணனாகிய மலையையும் தொளை பட்டுருவ - தொளைத்து ஊடுருவிப் போகும்படி தொடு வேலவனே - விடுத்த வேற்

படையை கையிலே தாங்கிக் கொண்டிருக்கிற அறுமுகக் கடவுளே
வளைபட்டகை மாதொடு - வளையல்களை யணிந்த கைகளை யுடைய மனைவியொடு
மக்களெனும் - மக்களும் (ஏனைய சுற்றமும், செல்வப் பொருளும்) என்று கூறப்படுகின்ற
தளைபட்டழிய - மலக்கட்டிலகப் பட்டு (நின் திருவடிகளை யடையவிரும்பும் நான் அத் திருவடிகளை )யடையாமல் கேடடைதல்
தகுமோ தகுமோ - தக்கதோ, தக்கதோ (தகாது என்றபடி)
நான் நினது திருவடிகளை யடையும்படி எனது உயிர்ப் பற்று, பொருட் பற்றுக் களை நீக்கி மெய்யறிவைத் தந்தருளாய் என்பது குறிப் பெச்சம்.

வி---ரை

கிளை என்பது இனம். அது இங்கே சேனைகளைக் குறிக் கின்றது. படுதல் - பொருந்தல். கிளைபட்டு - சேனையோடு பொருந்தி; அதாவது சேனையோடு சேர்ந்து. கிரி என்ப திங்கே கிரௌஞ்ச கிரியைக் குறிக்கிறது. தாரகாசுர னுடைய மாயாபுரி யென்னும் நகரத்திலே கிரௌஞ்சன் என்னும் ஒரு அசுரனிருந்தான். அகத்திய முனிவர் மேரு மலையி லிருந்து புறப்பட்டு தென்திசையை நோக்கிச் செல் லும் பொழுது அவன், அவர் வரும் வழியில் தனது மாயா சக்தியினாலே பல சிகரங்களை யுடைய மலையாய் தன்னிடத் துயக்கும் வழியைக் காட்டி நின்றான். அகத்திய முனிவர் அவ்வழியே குரோச தூரம்போக அவ்வழி முடிந்துபோகக் கண்டு தாம் வந்த வழியே திரும்பிச் செல்ல அதனையுங் காணாது மயங்கினர். அவர் இந்த மாயத்தைக் கிரௌஞ்ச அவுணனுடைய செயலென்றறிந்து தன்னுடைய கைத் தண்டினாலே அம்மலைமேல் தூற்றி மலைவடிவாயிருக்கிற அவு னனை நோக்கி, "நீ உன்னுடைய பழைய அசுர வடிவை நீங்கி இந்த மலை வடிவாயிருந்து அசுரர்களுக்கு இருப்பிட

மாய் முனிவர்களுக்கும், தேவர்களுக்கும் கொடுமை செய்து கொண்டிருந்து, பின்னே முருகவேளினுடைய வேற்படையினுலே நீ இறக்கக் கடவாய்,'' என்று சபித்துவிட்டுப் போனுர். அச்சாபத்தினுலே கிரௌஞ்சன் அம் மலை வடிவாகவே இருந்தான். இந்த மலையில் முருகக் கடவுள் தாரகன் முன்னே நேரில் வந்து போர் செய்தபொழுது அவனுடைய அசுரப் படைகளெல்லாம் அழிந்தன. பின் தனியே நின்ற தாரகன் கிரௌஞ்சமலையைப் பார்த்து மாயைகளை விரைந்து செய்யும்படி சொன்னுன். கிரௌஞ்சன் பல மாயைகளைச் செய்தான். முருகக் கடவுள் அவற்றைக் கண்டு தமது வேற்படையை நோக்கி தாரகாசுரனையும், கிரௌஞ்ச மலையையும் பிளந்து, மயங்கிக் கிடந்த இலக்கத் தொன்பது வீரர்களையும் மீட்டுக் கொண்டு வரும்படிப் பணித்தார். வேற்படை அங்ஙனம் செய்தது. ஆசிரியர் இங்கே கிரி எனக் கூறியது இம் மலை வடிவாயிருக்கிற கிரௌஞ்ச அவுணனை. தொட்ட என்று இறந்த காலத்தாற் கூறற்பாலது, வேலானது எப்பொழுதும் மலவலியை நீக்குமியல்பு பற்றி தொடு என நிகழ்காலத்தாற் கூறப்பட்டது. மாது என்ற பொதுப்பெயர் மக்கள் என்ற சொல்லுக்கு முன் வருதலினுலே மனைவியைக் குறித்து நின்றது. இங்கே வெளிப்படையாகக் கூறப்படாத சுற்றமும், செல்வப் பொருளும் இனம்பற்றிச் சேர்த்துக் கூறப்பட்டன. மனைவி, மக்கள் சுற்றமெல்லாம் ஒருவனுடைய உயிர்ப்பற்றுக்குப் பற்றுக் கோடுகளாயுள்ளன. இந்த உயிர்ப்பற்று அகப்பற்றென்றும், பொருட்பற்று புறப்பற்று என்றும் கூறப்படும். இந்த இருவகைப் பற்றுக்களும் ஒருவன் உலகவாழ்வில் நல்வினை, தீவினைகளைச் செய்து கொண்டிருக்கும் வரை அவனை விட்டு நீங்கி அவனுக்கு மெய்யறிவு உண்டாகாது.

வினையால் அசத்து விளைதலால் ஞானம்
விணதீரின் அன்றி விளையா.

என்று சிவஞானபோதம் 12-ம் சூத்திரம் வெண்பாக் கூறுதல் காண்க. இந்த இருவினை நீங்குதற்கு அவனுக்கு தன்னுடைய அறிவு நிலையில் இருவினை யொப்பும், அது பற்றி மலபரிபாகமும், சத்திநிபாதமு முண்டாதல் வேண்டும். அவை மூன்றும் உண்டாக அவன் மெய்யறிவு பெற்று முருகனுடைய திருவடிகளை யடைகின்றான்.

யானெனை தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.

என்றார் தெய்வப் புலமைத் திருவள்ளுவனாரும் ஆசிரியர் இந்த அகப்பற்றப் புறப்பற்றுக்களுக்குப் பற்றுக் கோடுகளாயிருக்கிற மனைவி, மக்கள் முதலிய சுற்றத்தாரையும், செல்வப் பொருளையும் தம்மை முருகனுடைய திருவடிகளை யடையவொட்டாமல் பிணித்திருக்கிற தளையாகிய மலக் கட்டாகக் கூறுகின்றார். அழிய என்பது அழிதல் என்னும் தொழிற்பெயர்ப் பொருளில் வந்தது. தகுமோ என்பது தகாது எனனும் பொருளில் வந்தது. ஓ, இடைச் சொல் எதிர்மறைப் பொருளைக் குறிக்கிறது. முருகனுடைய திருவடிப் பேற்றை விரும்புகிற தாம், மனைவி, மக்கள் முதலிய தளையிலகப்பட்டு உழன்று கெடுதல் தகாதென்பதை வற்புறுத்துவார் தகுமோ, தகுமோ என்று இரண்டுதரம் அடுக்கி ஆசிரியர் கூறினார்.

இந்த உண்மையைத் திருஞானசம்பந்த அடிகள்,

பெண்டிர் மக்கள் சுற்றமென்னும்
பேதைப் பெருங் கடலை

விண்டுபண்டே வாழமாட்டேன்
வேதனைநோய் நலியக்
கண்டுகண்டே யுன்றனமங்
காதலிக்கின்ற துள்ளம்
வண்டுகிண்டிப் பாடுஞ்சோலை
வலிவலமே யவனே —என்று

திருவலிவலம் தேவாரப் பதிகம் 3-வது பாட்டிலும்,

மனைவிதாய் தந்தைமக்கள் மற்றுள
சுற்ற மென்னும்
வினையுளே விழுந்தழுந்தி வேதனைக்
கிடமா காதே
கனையுமா கடல்சூழ்நாகை மன்னுகா
ரோணத் தானை
நினையுமா வல்லீராகி லுய்யலா
நெஞ்சி னீரே. —என்று

திருநாவுக்கரசு அடிகள் திருநாகைக்காரோணம் தேவாரப் பதிகம் 1-வது பாட்டிலும் கூறி அருளினமை காண்க. இதனை ஆசிரியர் உலகிலுள்ள மக்களுக்குக் கூறும் அறிவுரையாகத் தம் மேல் வைத்துக் கூறினர்.

(5) மகமா யைகளைந் திடவல் லபிரான்
முகமா றுமொழிந் துமொழிந் திலனே
யகமா டைமடந் தையரென் றயருஞ்
சகமா யையுணின் றுதயங் குவதே.

(ப--ரை)

மகமாயை - திரோதான சத்தியாலுண்டாகும் உலகவாழ்வு மயக்கத்தை
களைந்திட வல்லபிரான் - உயிர்களை விட்டு முற்றிலும் நீக்கு

மாற்றலையுடைய தலைவனாகிய அறுமுகக் கடவுள்
முகம் ஆறும் மொழிந்தும் - ஆறு திருமுகங்களும் (பன்னிரு திருக்கரங்களும் உடைய)

திருமேனி கொண்டு (என் முன் அருட்குரவனாய் வந்து உலக வாழ்வு மயக்கம் நீங்குவதற் கேதுவாகிய அருளுண்மையை) உபதேசித்திருந்தும் அகம் மாடு மடந்தையர் என்று அயரும் - வீடென்றும், செல்வமென்றும், பெண்டிர் என்றும் மயங்கி அவற்றை விரும்புகிற சகமாயை உள் நின்று - உலக வாழ்வு மயக்கிலகப் பட்டு தயங்குவது - (பேரின்ப மெய்துதற் கேதுவாகிய வீட்டுநெறி வாழ்வில் செல்லாது) மயங்கிக் கொண்டிருத்தலை ஒழிந்திலன் - நீக்கினேனல்லன். ஏ. இது என்ன இரக்கம் என்பது குறிப்பெச்சம்.

(வி---ரை)

சகாமாயை யென்பது மகமாயை எனக் குறுகியது மாயை என்பது திரோதான சத்தி வயப்பட்ட உலகச் சிற்றின்ப வாழ்வு மயக்கத்தைக் குறிக்கின்றது. கேவலத்தில் ஆணவமல இருளில் மூழ்கிக் கிடக்கு முயிர்கள் அவ்விருளினின்று ஒருங்கே நீங்கித் தன்னையறியு மறிவை அறிய மாட்டாமையினாலே அவை படிமுறையில் சிறிது சிறிதாய் அறியாமையாகிய இருளிலிருந்து நீங்கித் தன்னை யறியச் செய்யும் மெய்யறிவை யடையும் பொருட்டு இறைவனோடியைந்து நிற்கிற அருட்சத்தி, திரோதான சத்தியாகி அவ்வுயிர்களுக்கு மாயையின் காரியங்களாகிய தனுகரண புவன போகங்களை உதவி சகல நிலையில் உலகச் சிற்றின்பம் நுகரும்படி மயக்கி அருள் செய்கின்றாள். இங்ஙனம் திரோதானசத்தி உயிர்களை மயக்குவது, அவை பல பிறவிகளில் நல்வினை, தீவினைகளைச் செய்து அந்தக்கரண ஐம்பொறிகள் வழியே நாற்றம், சுவை, ஒளி, ஊறு, ஓசை என்னும் ஐம்புல விடயங்களை நுகர்ந்து அங்ஙனம் நுகர்ந்ததனா லுண்டாகியதன் பயனாக நிலையில்லாத அச்சிற்றின்பத்தை பொய்யென்று கண்டு கழித்து பேரின்ப நாட்டமுற்று மெய்யறி

வை யடைந்து நிலையான பேரின்ப வாழ்வை அடைதற் பொருட்டேயாகும். பேரின்ப நாட்டமுறும் பக்குவ மடைந்த மாந்தருயிர்களுக்கு அருட்சத்தி, அருட்குரவ னாய் நேரில் வந்து மெய்யறிவை யடைதற் கேதுவாகிய அரு ளுண்மைகளை அறிவுறுத்துகின்றாள். இந்த சித்தாந்த வுண்மை பற்றி ஆசிரியர் இந்தச் செய்யுளை உலகர்க்கு அறி வுறுக்கும்படி கூறுகின்றார். இந்த உலக வாழ்வு மயக்கம் நீங்குதற்கு அரியதாதலின் மகமாயை என்றார். பிரான் என் பது தலைவன். உயிர்களை மகாமாயையிலிருந்து நீக்கி மெ யறிவைக் கொடுத்துத் தனது திருவடிகளை யடையச் செய் தல் அவர்களுக்குத் தலைவனாகிய அறுமுகக் கடவுளுக்குக் கடமை என்பதும், சச்சிதாநந்த சொரூபனாகிய அவன் அக் கடமைகளைச் செய்ய ஆற்றலுடையவன் என்பதும் வல்ல பிரான் என்றதனாலே குறிப்பிடப் பட்டன. ஆசிரியர் தமக்கு அறுமுகக் கடவுள் அருட்குரவனாய் வந்து மெய்ப் பொருள் பேசியதை இந்நூல் 8-வது பாட்டில்,

அமரும் பதிகே ளகமா மெனுமிப்
பிமரங் கெடமெய்ப் பொருள்பே சியவா.

—என்றும்

இந்நூல் 11-வது பாட்டில்,

கூகா வெனவென் கிளைகூ டியழப்
போகா வகைமெய்ப் பொருள்பே சியவா.

—என்றும்

இந்நூல் 20-வது பாட்டில்,

அரிதா கியமெய்ப் பொருளுக் கடியே
னுரிதா வுபதே சமுணர்த் தியவா

என்றும் கூறியருளினர்.

மாடை என்பதில் ஐ அசை; மாடு - செல்வம். அகம், மாடு, மடந்தையர் இவையெல்லாம் இங்கே உலக நுகர்வுப் பொருள்களாகக் கூறப்பட்டன. அகம், மாடு முதலியன ஆண்களுக்கும், பெண்களுக்கும் பொது நுகர்வுப் பொருள் கள்; மடந்தையர் ஆண்களுக்கு மட்டும் கண்டும், கேட்டும், உண்டும், உற்றும் ஒருங்கே அறிந்து நுகரும் சிறப்பான நுகர்வுப் பொருள்கள். அயர்தல் - விரும்புதல். தயங்குவது - தொழிற்பெயர்; து - தொழிற் பெயர் விகுதி; வ - எதிர்கால விடைநிலை. ஏ - அசை. ஒழிந்திலனே என்பதிலுள்ள ஏ அசை. ஒழிந்திலனே என்றதனாலே ஆசிரியர் அறுமுகக் கடவுளைப் பார்த்து 'நீ எனக்குச் செய்யுங் கடனிலொன்றுங் குறைவில்லை, நான் நீ கூறியபடி நடவாத குறையை யுடையேன்' என்று கூறியவாறுபெற்று. ஆசிரியர் இச்செய்யுளின் கருத்தை,

மெய்யே யெனவெவ் வினைவாழ் வையுகந்
தையோ வடியே னலையத் தகுமோ
கையோ வயிலோ கழலோ முழுதுஞ்
செய்யோய் மயிலே றியசே வகனே.

என்று இந்நூல் 25-வது பாட்டிலும் கூறுதல் காண்க.

(6) திணியா னமனோ சிலைமீ துனதாள்
அணியா ரரவிந் தமரும் புமதோ
பணியா வெனவள் ளிபதம் பணியுந்
தணியா வதிமோ கதயா பரனே.

(ப--- ரை)

பணிஎன - (உனது திருவிளையாடலாக உலகத்தார் செய்யும்) செயல்போல,
வள்ளிபதம் பணியும் - வள்ளியம்மையாரை (உமது வயப்படுத்தி அருள் செய்யும் பொருட்டு) அவருடைய இரண்டடிகளையும் வணங்கின.
தணியா அதிமோக தயாபரனே - அவர்மேலே குறைதலின்றி மிகுதிப் படுகிற விருப்ப முடையவர் போல காட்டி அவருக்கருள் செய்யும் பொருட்டு அவரிடத்தில் மேலான அன்புடைய அறுமுகக் கடவுளே
திணியான மனோசிலைமீது - கடினமான மனமாகிய கல்லின் மேலே
உனதாள் - உனது திருவடியாகிய
அணியார் அரவிந்தம் அது - அழகு நிறைந்த தாமரை மலரானது
அரும்புமோ - அந்தக் கடினமான மனமாகிய கல்லினுள் நின்று முகாத்துக் கிளம்பி வெளிப்பட்டுத் தோன்றுமோ (தோன்றாது என்றபடி)
கடினமான மனதுடைய நான் எங்ஙனம் உனது திருவடிகளை யடைதற்குத் தகுதியுடையவனாவேன் என்பது குறிப்பெச்சம்.

(வி - ரை)

பணிஎன்பதில் யா, அசைநிலை. பணி-செயல். என என்பது உவமவுருபு. வள்ளியம்மையார் முற்பிறப்பில் திருமால் மகள் சுந்தரவல்லியாகவிருந்தாள். அவளும் அவளுடைய அக்காள் அமிர்தவல்லியும் இமயமலையிலுள்ள சரவணப் பொய்கையினருகில்தாங்கள் அறுமுகக்கடவுளுக்குபத்தினிகளாகும்படித் தவம்செய்தனர். அறுமுகக் கடவுள் அவர்களுடைய மெய்த்தவத்திற் கிரங்கி அவர்கள் முன்புதோன்றி "அமிர்தவல்லியாகிய நீ தேவேந்திரனுடைய மகளாகப் பிறந்து வளரக் கடவாய்; சுந்தரவல்லியாகிய நீ வள்ளிமலையில் தவம்செய்து கொண்டிருக்கும் திருமாலவதாரத்தினராகிய சிவமுனி அங்கே உலாவிக் கொண்டிருக்கும் லெக்குமி அவதாரமாகிய ஓர் பெண்மானை, ஆசையால் நோக்கியதனாலே அம்மான் கருப்பங் கொள்ள அக் கருப்பத்திலிருந்து பிறந்து, அங்கேயுள்ள குறவர்களாலே கண்டெடுக்கப்பட்டு அவர்களிடம்

வளாக்கடவாய்; நாம்வந்து உங்களை மணம்செய்து அருளு வோம்'' என்று வரங்கொடுத்தருளினர். அறுமுகக் கடவுள் தாம் சுந்தரவல்லிக்கு கொடுத்தருளிய வரத்தின்படி வேடர் குலத்தரசனுகிய நம்பியினுடைய மகளாய் வளர்ந்து தினைப் புனங்காத்துக் கொண்டிருக்கிற வள்ளி யம்மையாருக்கு அருள்செய்யும் பொருட்டு, அவ் வம்மையாரை தன்னைச் சேர இணங்கும்படி செய்தற்கு அவரைநோக்கி, "இங்கே உன்னை வந்தடைந்தேன். எனக்கு உன்னுடைய பாதங்க ளல்லது புகலிட மொன்றுமில்லை'' என்று கூறினர். (கந்த புராணம், வள்ளியம்மை திருமணப் படலம் 84, 105-வது பாட்டுகள்) இந் நிகழ்ச்சியை ஆசிரியர் இங்கே குறிப் பிட்டு வள்ளிபதம் பணியும் என்று கூறினர். அகப்பொருட் டுறையில், ஓர்தலைவி, ஓர் தலைவனை மணஞ்செய்து அவனோடு சேர்தல், ஒருயிர் இறைவனைச் சேர்ந்து அத்துவிதமாய்க் கலந்து, பேரின்ப மடைத்லென்னும் தத்துவப்பொருளைக் குறிக்கும். பணிந்த என இறந்தகாலத்தாற் கூறற்பாலது, பணியும்என நிகழ்காலத்தாற் கூறப்பட்டதனுல் தன்னைச் சேர்ந்து பேரின்பமடைய விரும்பாது உலகவாழ்விலே வாழு முயிருக்கு முருகன் அதனிச்சை வழியே நின்று உலகவின் பம் நுகர்விக்கின்ருன் என்பது குறிப்பிடப்பட்டது. தணியா அதிமோகம் என்பது, குறையாது மேலும் மேலும் மிகுதியாக வளர்கின்ற காம விருப்பம். இது முருகன் திரு விளையாட்டாகச் செய்யும் உலகவாழ்வின் இயல்பைக் குறிக் கின்றது. தயாபரன் என்னும் வடமொழிச்சொல், தயா - பரன் என்ற இரண்டு சொற்களால் ஆகியது. தயா - அன்பு, பரன்-மேலானவன்; தயாபரன்-உயிருக்குப்பேரின்பமருளும் மேலான அன்புடையவன். இதுமுருகனுடைய உண்மை

யான இயல்பு. தணியா அதிமோக தயாபரன் என்றதனாலே முறையே முருகனுடைய பொதுவியல்பும் சிறப்பியல்பும் கூறப்பட்டன. மனம் - சிலை - மனோசிலை - மனமாகியகல்; அதாவது கல்லைப்போல உருகாத கடினமான மனம். தாள் என்பது முருகனுடைய அருளைக்குறிக்கிறது. உன என் பதனீற்றிலுள்ள அகரம் அசைநிலை. முருகனுடைய திருவடி களை யடைதற்கு, அருளொளி, விளங்கி, வளர்ந்து, பெருகி அதனாலே நினைந்துருகும் செம்மை மனமானது கருவியா யிருத்தலின், கடின மனமானது அறுமுகக் கடவுளுடைய திருவடியாகிய தாமரை மலர் முகிழ்த்துப் பூத்தற்கு இடமாகா தென்று உருவகஞ் செய்து கூறினார். மாணிக்க வாசக அடிகள், திருவாசகம், திருவேசறவு 9-வது பாட் டில், 'மருவினிய மலர்ப்பாதம் மனத்தில் வளர்ந் துள்ளு ருக' என்று கூறியது நோக்குக. உயிர்களிடத்திலும் முருகக் கடவுளிடத்திலும் அகங்குழைந்துருகும் உண்மை யன்பில்லாத மனத்தில் முருகனுடைய அருள் விளக்கித் தோன்றிப் பெருகி இன்ப நலஞ் செய்யாது என்பது கருத்து. அதுபற்றி திருநாவுக்கரசு அடிகள், "நெக்கு, நெக்கு, நினைபவர் நெஞ்சுளே, புக்குநிற்கும் பொன்னார் சடைப்புண்ணியன்," என்று கூறியருளினார். (தனித்திருக் குறுந்தொகை 9-வது பாட்டு) அரும்புமது என்பதனீற்றி லுள்ள அது என்ற சொல்லை அரவிந்தம் என்பதனோடு சேர்த்துப் பகுதிப் பொருள் விகுதியாகக் கொள்க. அரும் புதல் - முகிழ்த்தல்; இங்கே தோன்றுதல் என்றும் பொரு ளில் வந்தது. ஓ, இடைச்சொல் எதிர்மறைப் பொருள்தந்து நின்றது. ஆசிரியர் இந்தச் செய்யுளில் கடவுளிடத்திலும், உயிர்களிடத்திலும் உண்மை யன்பில்லாத மனத்தை யுடையவர்களிடத்தில் பேரின்ப நலமெய்துதற்கு ஏதுவா யுள்ள அருள்விளங்கித் தோன்றாது என்ற உண்மையை உலகர்க்கு உணர்த்தி யருளினார்.

(7) கெடுவாய் மனனே கதிகேள் கரவா
திடுவாய் வடிவே லிறைதாள் நினைவாய்
சுடுவாய் நெடுவே தனைதூள் படவே
விடுவாய் விடுவாய் வினையா வையுமே.

(ப---ரை)

மனனே - (உலக வாழ்வை விரும்பியதனைப் பற்றிக் கொண்டு முருகன் திருவடியை யடைய விரும்பும் என்னோடு இணங்காதிருக்கிற) மனமே

கதிகேள் - (நீ என்னோடு இணங்குவாயானல் நானடைய விரும்பும் முருகன் திருவடிப் பேற்றுக்குச் சாதனமான) வழியைக் கேட்பாயாக

கெடுவாய் - (நீ என்னோடிணங்காவிட்டால் உலக வாழ்வு மயக்கில் விழ்ந்து பிறப்பிறப்புகளை யெய்தி) துன்பமடைந்து கேடுறுவாய். (அதனாலென்வணையும் கேடுறுவிப்பாய்)

வினையாவையும் விடுவாய் விடுவாய் - சிற்றின்பத்தை விரும்பி நீ, வேட்கை (இச்சை) அறிவு செயல் மூன்றினாலும் உலக வாழ்வில் பற்று வைத்துச் செய்யும் செயல்களெல்லாம் அறவே ஒழிப்பாயாக.

கரவாது இடுவாய் - (முருகனது திருவடிகளில் அன்புவைத்தற்கு உயிர்களிடத்தில் அன்பு செய்தல் பயிர்ச்சியா யிருத்தலால் உன்னிடத்திலே வந்து இரப்பவர்களுக் கிரங்கி அன்பினாலே, உன்னாலே கொடுக்க இயலும் பொருளை) ஒளியாது கொடுப்பாயாக

வடிவேல் இறைதாள் நினைவாய் - (நீளமும், அகலமும்) கூர்மையுமாயுள்ள வேற்படையைத் தனது திருக்கர மொன்றிலே தாங்கி யிருக்கிற தலைவனுகிய முருகக் கடவுளுடைய திருவடிகளை (அவன், நீ பேரின்பமடையும்படி உனக்குச் செய்யும் அருட்செயல்) நினைந்து அன்பினாலே கசிந்துருகி வணங்குவாயாக.

நெடுவேதனை - (அங்ஙனம் நீ, முருகக் கடவுளுடைய திருவடிகளை நினைந்துருகிவணங்குதலினாலே) நீ, நீண்டகாலமாகப் பிறந்தும் இறந்தும், அடைந்து வருகிற துன்பங்களை யெல்லாம்

தூள்படவே சுடுவாய் - பொடியாகும்படி மெய்ஞ்ஞானத்தினாலே சுட்டெரிப்பாயாக; அதாவது இனி யுண்டாகா திருக்கும்படி மெய்ஞ்ஞானத்தினாலே அறவே யொழிப்பாயாக.

மனமே நீ என்னோடிணங்கி யொழுகுவாயானல் நான் முருகக் கடவுளது திருவடிப் பேற்றினை யடைந்து உய்வேனென்பது குறிப்பெச்சம்.

(வி---ரை)

மனன் என்பது மனம் என்பதன்போலி. ஆசிரியர் உலகர்க்கு அறிவுறுத்தும் பொருட்டு தம்மனத்தை வேறுபடுத்தி முன்னிலையாக்கி விளித்துக் கூறுதலினாலே அவர் தம்முடன் இணங்காத மனமென்று பதவுரையிற் கூறப்பட்டது. மனமொன்றுதானே புறநோக்கில் ஏனைய தத்துவங்களுடன் உயிரைத்தன்வயப்படுத்திஐம்பொறிகளின் வழியாய் ஐம்புல உலகயோகம் நுகர்தற்குக் கருவியாயும், அகநோக்கில் ஏனைய தத்துவங்களோடு உயிருடன் ஒற்றித்து நின்று சிவனையே சிந்தித்துக் கொண்டிருக்கும் சிந்தையாய் சிவபோகம் நுகர்தற்கும் கருவியாயுமுள்ளது. மனமானது புறநோக்கில் விடயிக்கும் பொழுது காமமனம் அல்லது கீழ்மனம் என்றும், அகநோக்கில் விடயிக்கும்பொழுது மன்மனம் அல்லது உயர் மனம் என்றும் கூறப்படும். உயிரைத் தன்வயப்படுத்தி பிரகிருதி மாயை இடமாகக்கொண்டு தொழில் செய்து உலகயோக விடயங்களைப் பற்றி நுகரும் கீழ்மனமானது உலகபோக விடயங்களைப் பற்றுதலும், விடயித்தலு மொழிந்த பொழுது சுத்தமாயை யிடமாகக்கொண்டு தொழிற்செய்யும் சிந்தையாக மாறுகின்றது. இந்தச்சிந்தையில் புறஅந்தக்கரணங்களும் ஒன்றுசேர்ந்து அடங்கும். அப்பொழுது கீழ்மனம் என்பதொன்றில்லையாய் உயர்மனம் அல்லது மனமாகிய சிந்தையிலொடுங்கி விடுகின்றது. உமாபதிசிவம் தேவார அருள்முறைத்திரட்டு "புலன்களைப் போக நீக்கி" என்றும் முதற்குறிப்புடைய 51-வது பாட்டிலும், அடுத்த 52-வது பாட்டிலும் இந்த வுண்மை கூறப்பட்டிருக்கின்றது. அப்பாட்டுக்களின்கீழ் நானெழுதியுள்ளஉரையையும்பார்க்க.

இவ்வுண்மையைப்பற்றி ஆசிரியர் முருகனது திருவடிகளையே சிந்தித்துக்கொண்டிருக்கும் தம்முடன் ஒன்றுபட்டு நில்லாது புறத்திலுள்ள உலகபோக விடயங்களைப்பற்றி விடயிக்கும் மனத்தைப் பார்த்துக் கூறுவதாக இந்த செய்யுளிற் கூறுகின்றார்.

கெடுதல் என்பது உலக பற்று காரணமாக விளையும் நல்வினை தீவினைகளால் உண்டாகும் பிறப்பிறப்புக்களினால் வரும் துன்பங்களைச் குறிக்கிறது. மாணிக்கவாசக அடிகள், திருவாசகம், திருச்சதகம் 20-வது பாட்டில்,

வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே வல்வினைப்பட்
டாழ்கின்றா யாழாமற் காப்பானை யேத்தாதே
சூழ்கின்றாய் கேடுனக்குச் சொல்கின்றேன் பல்காலும்
வீழ்கின்றாய் நீயவலக் கடலாய வெள்ளத்தே.

என்று இந்தக் கேட்டினைப் பற்றிக் கீழ்மனத்துக் சுறிவுறுத்தி யருளினமை காண்க.

வினையென்பதிங்கே உலகப்பற்று காரணமாகச் செய்யப் படும் செயல்களனைத்தையுங் குறிக்கின்றது. அவற்றை விடுதல் வடிவேலிறைதாள் நினைதற்குமுன் இன்றியமையாது வேண்டப் படுதலால் அதனை முன்வைத்து பொருளுரைக்கப் பட்டது. உயிர்களுக்கு அருள்பற்றிச் செய்யும் அன்பு, முருகக் கடவுளுக்குச் செய்யும் அன்பாதலின் கரவாதிடுவாய் என்றார். கரவாதிடுதல் வடிவேலிறைதாள் நினைதலுக்குத் துணையா யிருத்தலின் அதனை அதற்கு முன் வைத்துக் கூறினார். வேற்படையானது முடியில் நுனித்துக் கூர்மையாயும், அதற்குமேலே அகன்று விரிவாயும், அதற்

கு மேலே நீண்டு மிருத்தலானது எங்கும் நிறைந்துள்ள வியாபகமான மெஞ்ஞான சக்தியைக் குறித்தலால் வடிவேவிறை என்றார். பிறப்பிறப்புக்களினால் உண்டாகும்வேதனை முற்று மொழிதல் வடிவேவிறைதாள் நினைதலின் பயனாதலின் அது அதற்குப் பின்வைக்கப் பட்டது. இங்ஙனம் வினையாவையும் விடுதல், கரவாதிடுதல், வடிவேவிறைதாள் நினைதல், வேதனை தூள்பட சுடுதல் ஆகிய இவைநான்கும் முறையே ஏதுவும், பயனுமாய் முருகக் கடவுளுடைய திருவடிகளை யடைதற்கு வழிகளாகக் கூறப்பட்டிருத்தலறிக. திருஞானசம்பந்த அடிகள், திருச்சோற்றுத் துறைப்பதிகம் செப்பநெஞ்சே என்னும் முதற் குறிப்புடைய 1-வது பாட்டில் கூறிய கருத்துடன் இச்செய்யுளின் கருத்தை ஒப்பிட்டு நோக்கி யறிக. மேலைச்செய்யுளில் அன்பினாலே இளகி யுருகாத கடினமான மனமானது முருகக் கடவுளுடைய திருவடிகளை யடைதற்கு கருவியா யிராதென்று கூறிய ஆசிரியர் இந்தச் செய்யுளில் உலக போகத்தைப் பற்றி விடயிக்கும் கருத்துடைய மனமானது அவனுடைய திருவடிகளை யடைதற்குக் கருவியா யிராதென்று கூறுகிறார்.



(8) அமரும் பதிகே ளகமா மெனுமிப்
பிமரங் கெடமெய்ப் பொருள்பே சியவா
குமரன் கிரிரா சகுமா ரிமகன்
சமரம் பொருதா னவநா சகனே.

(ப---ரை)

குமரன் - என்றும் கட்டிளமை நீங்காத குமாரக் கடவுளே
கிரிராச குமாரி மகன் - இமயமலையரசனுடைய மகளாகிய பார்வதி தேவியின் புதல்வனே
சமரம்பொரு தானவ நாசகனே - போர்க்களத்திலே போர்செய்து அசுரர்களை அழித்தவனே
அமரும்பதி - நான்தங்கி யிருக்கும் எனது வீடு
கேள் - எனது மனைவி மக்கள் முதலியஉறவினர்கள்
அகம் - நான்
எனும் - என்று கூறப்படுகின்ற
ஆம் இப்பிமரம் கெட - புறப்பற்று அகப்பற்றுக்களா லுண்டாகிற இந்த மயக்கவறிவு (அவிச்சை) கெட்டொழியும்படி
மெய்ப்பொருள் பேசியவா - மெய்யறிவை எனக்கு அருட்குருவாய் வந்து அறிவுறுத்தின (உபதேசித்த) வனே
போற்றி - உனக்குவணக்கம்.

வி--- ரை அமரும்பதிகேள் என்பன, எனது என்ற புறப்பற்றுக்குரியவை. அகம் என்பது அகப்பற்றுக்குரியது. எனது என்னும் புறப்பற்றுலும், யான் என்னும்அகப்பற்றுலும் உலகவாழ்வில் மயக்கமுண்டாதலின், 'அமரும் பதிகே ளகமா மெனுமிப் பிமரம்' என்றார். ஆம் என்பது ஆகும் என்றசொல்லின் இடைக்குறை. பிமரம் என்ற வடமொழிச்சொல் மயக்கத்தை உணர்த்துகிறது. அது மயக்கவறிவு என்றும், விபரீத உணர்வுஎன்றும், அவிச்சை என்றும் கூறப்படும். இந்தமயக்கமானது மூலமலமாகிய ஆணவமலத்தின் காரியம். இந்த அவிச்சையாகிய மயக்கவறிவானது, அநித்தத்தை நித்தமென்றும், அசுத்தத்தைச் சுத்தமென்றும், துன்பத்தை இன்பமென்றும், தானல்லாத பொருளைத் தானென்றும் உலகவாழ்வில் திரியக்காணும் சுட்டறிவாகும். இந்தச் சுட்டறிவு காரணமாக மக்களுக்கு யானெனமதிக்கும் அகங்காரமும், அவ்வகங்காரம்பற்றி எனக்கிது வேண்டுமென்னும் அவாவும், அவ்வவாபற்றி உலகநுகர்வுப் பொருள்மேல் செல்லும் ஆசையும், அவ்வாசைப்பற்றி அப்பொருள் கிடையாதபொழுது எழும் வெகுளியும் உலகவாழ்வி லுண்டாகின்றன.

இவ் வைந்தும் காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்னும் பஞ்சகஞ்சுக வுடலோடு கூடிய புருடனுகிய ஆன்மாவுக்குக் குணமயமாயுள்ள பிரகிருதிமாயையில் உலக போக நுகர்ச்சிக்கு ஏதுக்களாயுள்ள பஞ்சகிலேச மென்னும் பும்ஸ்துவமலமென்று கூறப்படும். இவ்வைந்தினையும் திருவள்ளுவ நாயனுர் காமம், வெகுளி, மயக்கம், என்னும் மூன்றினுள்ளடக்கி 360-வது குறளிலும், திருமூலர் திருமந்திரம் 2435, 2436-வது பாட்டுக்களிலும் கூறுகின்றனர். இந்தப் பஞ்சக்கிலேசம் அறவே நீங்கினுலொழிய முருகனுடைய திருவடிப்பேருகிய பேரின்பத்தை யடைய முடியாதாதலின், 'பிமரங் கெடமெய்ப் பொருள்பேசியவா' என்முர். மெய்ப்பொருள் - மெய்யாகியபொருள். அதாவது மெய்யறிவு. உலகநுகர்வுப் பொருள்களெல்லாம் நிலையில்லாமை யாகிய பொய்த்தன்மை (அசத்துத்தன்மை) யுடையன. பஞ்சக்கிலேசத்தாலுண்டாகு மிந்த பொய்த்தன்மையானது ஒருவருக்கு என்றும் நிலையாயுள்ள அருளாகிய மெய்யை முற்றிலும் பற்றுதலால் நீங்கி அதன்வழி பேரின்பமுண்டாகும் உலகப்பொருளை யறியும் பிரமமாகிய பொய்யறிவு (மயக்கம்) கெட மெய்யறிவு இன்றியமையாது வேண்டப் படுகின்றது. இந்த சித்தாந்த வுண்மையை ஆசிரியர் இங்கே கூறியருளினுர். போற்றி என்றசொல் தொக்கி நிற்கிறது. இசை யெச்சம்.

(9) மட்டூர் குழன்மங் கையர்மை யல்வலைப்
பட்டு சல்படும் படரென் ருெழிவேன்
தட்டு டறவேல் சைலத் தெறியும்
நிட்டூ ரநிரா குலநிர்ப் பயனே.

(ப---ரை)

| | |
|---|---|
| சைலத்து | - கிரௌஞ்சமலையினிடத்து |
| ஊடுதட்டு அற | - அதனிடையே வழியாகக் கொண்டு செல்லும் முனிவர்களைத் துன்புறுத் தும் பொருட்டு கிரௌஞ்ச அவுணன் தன் மாயையினாலே உண்டுபண்ணிய மறைவுகள் முற்றிலும் ஒழியும்படி |
| வேலெறியும் | - வேற்படையை எறிந்த |
| நிட்டுரன் | - தன்னை வணங்காதவர்களுக்குக் கொடி யவனும் |
| நிராகுலன் நிர்ப்பயன் | - தன்னை வணங்கும் அடியார்களுக்கு உலக வாழ்விலே யுண்டாகும் மனக் கலக்கத்தை யொழிக்கிறவனும் அச் சத்தை நீக்குகிறவனுமாகிய முருகக் கடவுளே! |
| மட்டூர்குழல் மங்கையர் | - நறுமணமுள்ள கூந்தலை யுடையமாதர் |
| மையல் வலைப்பட்டு | - செய்கின்ற மயக்கமாகிய வலையிலே விழுந்து |
| ஊசல் படும்படர் | - எந்த உலக நுகர்வுகளிலும் அமைதி பெறாமல் ஊஞ்சலைப்போல அங்கு மிங் கும் அசைந்து உழல்கின்ற துன்பத்தி னின்று |
| என்று ஒழிவேன் | - எக்காலம் நீங்கி நினது திருவடி யின் பத்தை யடைவேன். பிறவித் துன்பத்தை நீக்கி உனது திரு வடி யின்பத்தை யளித்துக் காத்தருளு வாய் என்பது குறிப்பெச்சம். |

(வி - ரை)

சைலத்து என்பதில் அத்து சாரியை, அகரம் கெட் டது. சைலம் என்பது கிரௌஞ்சமலை. அதனைப்பற்றி முன் 4-வது பாட்டின்கீழ் எழுதிய விளக்க உரையைப் பார்க்க. தட்டு என்பது வழியே செல்லும் முனிவர்களை கிரௌஞ்ச அவுணன், அவர்கள் போகும் வழியென்று காட்டி தனது மாயையினாலே மறைத்து மயக்கும் மறைவு.

நிட்டுரநிரா குலநிர்ப் பயன் என்பதை நிட்டூரன், நிராகுலன், நிர்ப்பயன் எனவிரிக்க. ஏ- விளியுருபு. நிட்டூரன் என்பது தன்னை வணங்காதவர்களுக்குச் செய்யும் முருகனது கொடுமையாகிய மறக்கருணையையும், நிராகுலன், நிர்ப்பயன் என்பன தன்னை வணங்கும் அடியார்களுக்குச் செய்யும் முருகனது அறக்கருணையையும் குறிக்கின்றன. தன்னை வணங்காதவர்க்குத் துன்பஞ் செய்தல் அவர்கள் தன்னையடைந்து உய்யும்படிச் செய்யும்செயலாதலின் மறக் கருணை எனப் பட்டது.

"நலமிலன் நண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன் சலமிலன் பேர்
சங்கரன்."

என்று உமாபதி சிவாச்சாரியார், திருவருட்பயனிலும்,

"சார்ந்தார்க்குப் பொற்கொழுந்தே ஒத்திலங்கிச் சாராது
பேர்ந்தார்க்கு தீக்கொடியின் பெற்றியவா"

என்று காரைக்காலம்மையார், அற்புதத் திருவந்தாதியிலும் இறைவனுடைய மறக்கருணையையும், அறக்கருணையையும் கூறி யிருத்தல் காண்க. கேட்டும், தீண்டியும், கண்டும், உண்டும், மோந்தும், அறிந்து நுகர்கிற ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்னும் ஐம்புலன்களாகிய உலக விடயங்களெல்லாம் மங்கையர்களிடத்தி லடங்கி யிருக்கின்றனவாதலின் ஆசிரியர் மேலைச் செய்யுளிற் கூறியிருக்கிறபடி பஞ்சக்கிலேச மென்னும் பும்ஸ்துவ மலத்தாலுண்டாகிற உலக வாழ்வு நுகர்வு மயக்கத்தை இந்தச் செய்யுளில் மங்கையர் மையல்வலை என்றார். மாணிக்கவாசக அடிகள், அச்சோப்பதிகம் 3-வது பாட்டில்

பொய்யெல்லா மெய்யென்று புணர்முலையார் போகத்தே
மையலுறக் கடவேனை மாளாமேதகாத்தருளித்

தையலிடங் கொண்டபிரான் தன்கழலே சேரும்வண்ணம்
ஐயனெனக் கருளியவா ருர்பெறுவா ரச்சோவே.

என்று மங்கையர் மையலைப்பற்றிக் கூறி யிருத்தல் காண்க.

ஊசல் படுபடர் என்பது உருவகம். ஓரிடத்தில் நிலை பெருமல் ஊஞ்சலானது முன்னும், பின்னும் அசைந்து கொண்டிருத்தல் போல உலக வாழ்வுப் பற்றுடைய ஒருவனது நெஞ்சம் எந்த உலகவின்பத்திலும் அமைதி பெருமல் ஒன்றைவிட்டொன்று பற்றி உழலுதலாலடையும் துன்பம்.

"உறுகயி றூசல்போல வொன்று விட்டொன்று பற்றி
மறுகயி றூசல்போல வந்தவந் துலவு நெஞ்சம்"

என்று திருநாவுக்கரசு அடிகள் கூறுதல் காண்க. (தேவார அருள்முறைத் திரட்டு 77-வது பாட்டு) என்றுழிவேன் என்றதனுல் எக்காலம் இந்தத் துன்பத்தினின்று நீங்கி உன்னுடைய திருவடி யின்பத்துக்கு ஆளாவேன் என்ற கருத்து கூறப்பட்டது.

தாயுமான அடிகள்,

"திண்ணிய நெஞ்சப் பறவைசிக்கக் குழற்காட்டிற்
கண்ணிவைப்போர் மாயங்கடக்குநா ளென்னுளோ" என்றும்

"மெய்யிற் சிவம்பிறக்க மேவுமின்பம் போன்மாதர்
பொய்யிலின் பின்றென்று பொருந்துநா ளென்னுளோ என்றும்

கூறியிருத்தல் காண்க.

(10) கார்மா மிசைகா லன்வரிற் கலபத்
தேர்மா மிசைவந் தெதிரப் படுவாய்
தார்மார் பவலா ரிதலா ரியெனும்
சூர்மா மடியத் தொடுவே லவனே.

(ப--ரை·)

தார்மார்ப - கடப்பமாலையை யணியும் மார்பையுடையவனே
வலாரிதலாரி - வலனென்னும் அசுரனுக்குப் பகைவனாகிய தேவேந்திரனுடைய விண்ணுலகத்தை அழித்த பகைவனாகிய
மாசூர்மடிய - மாமரவடிவாய்நின்ற சூரபன்மனை இருகூறாகப் பிளத்து அடங்கும்படி
தொடுவேலவனே - விடுத்த வேற்படையைக்கையிலேதாங்கியிருக்கும் முருகக்கடவுளே
கார்மாமிசை - கருமையான விலங்காகிய எருமைக்கடாவின் மேலேறிக்கொண்டு
காலன்வரில் - (எனதுயிரைப் பருவுடலினின்றும் பிரிக்கும்படி காலன்வந்தால்
ஏர்மாகலபத்துமிசைவந்து - அழகும் (பச்சை) நிறமுமுடைய மயிலின் மேல் எழுந்தருளிவந்து
எதிரப்படுவாய் - நேராகநின்று காட்சிகொடுத்து காலனுடைய (அச்சம்நீக்கி) என்னைக்காப்பாற்றியருள்வாயாக.

முருகக்கடவுளே! காலன்வராமல் காத்து நினது திருவடியின்பத்தைத் தந்தருள்வாய் என்பது குறிப்பெச்சம்.

(வி---ரை)

வலம் - அரி - வலாரி: வலனென்னும் அசுரனுக்குப் பகைவன். தலம் - அரி - தலாரி: தேவேந்திரனுடைய தலமாகிய விண்ணுலகத்தை யழித்த பகைவன். வலாரி, தலாரி இரண்டும் வடமொழி தீர்க்கசந்திகள். முருகனுடைய திருவடிப் பேற்றையடைய விரும்பும் தமக்குத் காலன்வந்து தமதுயிரைப் பருவுடலினின்றும் பிரிப்பது தகாததாதலின், 'கார்மா மிசைகா லன்வரிற் கலபத் தேர்மா மிசைவந் தெதிரப்படுவாய்' என்று ஆசிரியர் கூறினார். வரில் என்றதனாலே வருதல் அருமைஎன்பது குறிப்பிடப்பட்டது. முருகக்கடவு

வினுடைய அநுபூதிநிலையிலுள்ள அடியார்களிடத்து காலன் வரக்கடவதோர் தன்மையல்லை என்பது கருத்து. இக் கருத்தை ஆசிரியர் இந்நூல் 41 - வது பாட்டிலும், கந்தரலங்காரம் 50வது, 64வது பாட்டுக்களிலும் கூறுதல்காண்க. திருநாவுக்கரசு அடிகள் திருவாரூர் போற்றித் திருத்தாண்டகம் 9வது பாட்டில் "சாவாமே காத்தென்னை ஆண்டாய் போற்றி" என்று கூறியருளியதும் நோக்குக.

(11) கூகா வெனவென் கிளைகூ டியழப்
போகா வகைமெய்ப் பொருள்பே சியவா
நாகா சலவே லவநா லுகவி
த்யாகா சுரலோ கசிகா மணியே.

(ப---ரை)

நாகாசலவேலவ - நாகாசலமென்னும் திருவேங்கிட மலையில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கிற வேலாயுதக்கடவுளே
நாலுகவித்யாக - ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நாலுவகைத் தமிழ்க்கவிகளைப் பாடுகிறவன்பர்களுக்கு அவர்கள் வேண்டுவனவற்றைக் கொடுக்கிறவனே
சுரலோகசிகாமணியே - விண்ணுலகிற்குத் தலைவனாயிருக்கிறவனே
என்கிளைகூடி - என்னுடைய மனைவி, மக்கள் முதலியசுற்றத்தார் ஒன்றுசேர்ந்து
கூகாவெனஅழ - கூ கா வென்று ஓலமிட்டழும்படி
போகாவகை - (இந்தப்பருவுடலை விட்டு மறுலோகத்திற்கு உயிர்பிரிக்கப்பட்டு)நான்சாகாமலிருக்கும்படி
மெய்ப்பொருள்பேசியவா - மெய்யறிவைஎனக்கு அறிவுறுத்தினவனே (உபதேசித்தவனே)
(போற்றி - உனக்கு வணக்கம்.)

(வி---ரை)

நாகாசலம் என்பது திருவேங்கடமலையைக் குறிக்கிறது. இது முற்காலத்தில் முருகக்கடவுள் எழுந்தருளியிருக்கிற மலையாயிருந்தது. ஆசுகவியென்பது, பிறனொருவன் இன்ன பொருளமைத்துப் பாடுகவெனக் கேட்டவுடனே அப்பொருளமைத்துத் தமிழ்புலவனொருவன் பாடும் பாட்டு. மதுரகவியென்பது சொற்செறிவு, பொருள் செறிவுடையதாய் தொடைவிகற்பங்களுடன் இனிமைதரும்படி பாடுகிற பாட்டு. சித்திரகவியென்பது கோமூத்திரி, மாலைமாற்று முதலிய சித்திரங்களில் அமைத்துப்பாடும் பாட்டு. வித்தாரகவியென்பது மும்மணிக்கோவை பன்மணிமாலை முதலிய பிரபந்தங்களில் விரித்துப் பாடும் பாட்டு.

"மொய்தார் அணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால்
வைதாரையும் அங்கு வாழவைப்போன்"

என்று முருகன் தமிழ்மொழிப் பிரியன்என்பதை ஆசிரியர் கந்தரலங்காரம் 22-வது பாட்டில் கூறுதல் காண்க. சிகாமணியென்பது தலையின் உச்சியிலே அணியப்பெறும் நவரத்ன மாலையைப்போல சிறந்துவிளங்கும் தலைவனைக் குறிக்கிறது. விண்ணுலகத்திலுள்ள தேவர்களுக்கு சூரபன்மன் முதலிய அசுரர்களால் வந்த துன்பத்தை நீக்கி முருகக்கடவுள்காத்தருளினமையால் சுரலோக சிகாமணியே என்று விளித்தார். கூ கா - ஒலிக் குறிப்புச்சொல். போகாவகையென்பது பருவுடலைவிட்டு உயிர் கூற்றுவனால் பிரிக்கப்பட்டு இறந்து போகாதிருத்தல். போகாவகை மெய்ப்பொருள் பேசியவா வென்றதனாலே மெய்ப்பொருளைமுருகன் அறிவுறுத்தினமை இறவாதிருத்தலுக்குக் காரணமாகக்

கூறப்பட்டது. மேலைச்செய்யுளின் விளக்கவுரையிற் கூறிய படி சுட்டறிவினின்று நீங்கி முருகனோடத்துவிதமாய்க் கலத்தலினாலுண்டாகிற மெய்யறிவு பெற்றவர்கள் நமனுக்காளாகார் என்பது கருத்து. இந்தக்கருத்தை திருமூலர் திருமந்திரம் 29, 63-வது பாட்டில்

"நமன்வரின் ஞானவாள் கொண்டே எறிவன்
சிவன்வரின் நானுடன் போவது திண்ணமே"

என்று கூறியருளினமை காண்க. போற்றி யென்ற சொல் செய்யுளின் முடிவில் தொக்கிநிற்கிறது. இது இசை யெச்சம்.



(12) செம்மான் மகளைத் திருடுந் திருடன்
பெம்மான் முருகன் பிறவா னிறவான்
சும்மா விருசொல் லறவென் றலுமே
அம்மா பொருளொன் றுமறிந் திலனே.

(ப--ரை)

| | |
|---|---|
| செம்மான்மகளை | - சிவந்தநிற முள்ள ஓர் பெண்மானினுடைய கருப்பத்திலிருந்து பிறந்த மகளாகிய வள்ளியம்மையை |
| திருடுந்திருடன் | - முதற்கண் அகப்பொருட்டுறைக்களவியலில் அவளைவளர்த்த தாய் தகப்பன் அறியாத படி தோழிமூலமாகக் கவர்ந்து கூட்டிக் கொண்டுபோனவனும் |

| | |
|---|---|
| பெம்மான் | - எல்லா வுயிர்களுக்கும் தலைவனும் |
| பிறவான் இறவான் முருகன் | - பிறவாதும், இறவாதும் என்றும் கட்டிளமையோடிருப்பவனுமாகிய முருகக்கடவுள், |
| சொல்லற சும்மா இரு என்றலுமே | - என்முன் அருட்குரவனாய் வந்து சொல்லொழிந்து முடிவாகும்படி மௌனமாயிருக்கச் செய்தபின் |
| பொருளொன்றும் அறிந்திலனே | - காண்பான், காட்சி, காட்சிப் பொருள், என்ற வேற்றுமை ஒன்றுமறியாத இன்ப வுணர்வானேன். |
| அம்மா | - இது என்ன அதிசயம். |

(வி - ரை)

திருமால் மகளாகிய சுந்தரவல்லி ஓர் பெண்மானினிடத்து சிவமுனிவருடைய காமப்பார்வையால் கருப்பந்தரித்து ஓர் பெண்ணாய்ப் பிறந்து நம்பியாசனால் எடுத்து வளர்க்கப்பட்டமை முன் ஆறுவது பாட்டின் விளக்கவுரையில் கூறப்பட்டது. முருகக்கடவுள் நம்பியாசனுடைய சிற்றூரில் அவனுடைய இல்லிலிருந்த வள்ளியம்மையாரை ஒரு நாளிரவு வந்து அவளுடைய தோழியின் துணைகொண்டு அவளை வளர்த்த தாய்தந்தையர் அறியாது கவர்ந்து ஓர் மாச்சோலைக்குக் கூட்டிக்கொண்டு போய் அங்கு அவளோடு தங்கியிருந்தார். இங்ஙனம் வள்ளியம்மையாரை அவள் தாய், தகப்பன் அறியாது கவர்ந்து கூட்டிக்கொண்டுபோன முருகக் கடவுளை ஆசிரியர் 'செம்மான் மகளைத் திருடும் திருடன்' என்றார். இது அகப்பொருட்டுறை களவியலின்பாலதாகும். பின் தாய் தந்தையர்கள் சம்மதத்துடன் முருகக்கடவுள் நம்பியாசனுடைய இல்லில் வைத்து மணஞ் செய்தது கற்பியலின் பாலதாகும். இதன் விரிவை கந்தபுராணம் வள்ளியம்மை திருமணப்படலத்தில் பார்க்க. பெம்மான் என்றத

ஞலே முருகக்கடவுள் வள்ளியம்மையாரைக் கவர்ந்து கூட்டிக்கொண்டுபோய் பின் மணஞ்செய்தது முற்பிறப்பில் சுந்தரவல்லியாயிருந்த அவள் தவஞ்செய்து கேட்டுக்கொண்டபடி அவளுக்கு அருள் செய்தற்பொருட்டாகும். திருடன் என்பதற்கு பதவுரையிற் கூறப்பட்ட பொருள் வெளிப்படையான பொருள். மாந்தர்களுடைய உள்ளத்தினுள் முருகன் அவர்களறியாமலிருந்து தன்னையடையும்படி உணர்த்திக்கொண்டிருப்பதை உள்ளுரைப் பொருளாகக் குறிக்கிறது. அங்ஙனம் பக்குவப்பட்ட மாந்தருக்கு முருகன் அருட் குரவனுய் வெளியே வந்து தன்னையடையும் நெறியையுணர்த்தி அவர்கள் பிறப்பிறப்பு நீங்கும்படி செய்கின்றனென்பதை குறிப்பிடப் பின்னுலே பிறவானிறவான் முருகன் என்றார். சொல்லற சும்மாவிருத்தல் என்பது உயிரானது மனம், நா, உடல், மூன்றும் செயலற்று நான், எனது என்னும் செருக்கொழிந்து மௌன நிலையடைந்து எங்கும் வியாபகமான முருகனுடைய திருவடி நிறைவிலொடுங்கி பேரின்பமுறச் செய்தலாகும். அது முருகனுடைய செயலாதலினுலே சும்மா இரு என்றலுக்கு பிறவினைப்பொருள் கூறப்பட்டது.

"குறியுங் குணமுமறக் கூடாத கூட்டத், தறிவறிவாய் நின்றவிட வாங்கே—பிறிவறவுஞ், சும்மாவிருத்திச் சுகங் கொடுத்த மோனநின்பால், கைம்மாறு காணெழிதல்காண்".

என்று உயிரை இறைவன் சும்மா விருத்தி யின்பங் கொடுத்தலை தாயுமான அடிகளும் (539-வது பாட்டு தாயுமானவர் பாடல்)

"மாயப்பாழ் சீவன் வியோமப்பாழ் மன்பான்
சேயமுப் பாழெனச் சிவசத்தி யிற்சிவன்

ஆய வியாப்த மெனுமுப்பா ழாம்அந்தத்
தூய சொருபத்திற் சொல்முடி வாமே"

என்று சொல்லறுதலைப்பற்றி திருமூலரும் கூறியிருத்தலறிக. (திருமந்திரம் 2496-வது பாட்டு)

"சும்மா இருக்கச் சொன்னதோர் வார்த்தை
அம்மா அதிசயம் யாருடன் புகல்வேன்"

என்று திருச்செந்தூர் அகவலில், சிற்றம்பல நாடிகள் கூறியதுங் காண்க.

இந்த மோன இன்ப நிலையில் உயிரோடு முன் உறவாயிருந்த சிந்தையல்லது மனம் அறவே நீங்கி விடுகிறது. காண்பான், காட்சி, காட்சிப் பொருள் மூன்றும் காணாத இரண்டற்ற சுத்தாத்துவித நிலையாதலால் பொருளொன்றும் மறிந்திலனே யென்றார்.

"காண்பானுங் காட்டுவதுங் காண்பதுவும் நீத்தன்மை
காண்பார்க ணன்முத்தி காணார்கள்—காண்பானுங்
காட்டுவதுங் காண்பதுவுந் தன்கடந்தைச் சம்பந்தன்
வாட்டுநெறி வாரா தவர்."

என்று உமாபதி சிவாசாரியார் வினாவெண்பா 11-வது பாட்டிலும்,

"ஞான, ஞேயமோடு ஞாதிருவு மாடா வண்ணம், பின்
மார்க்கச் சிவனுடனும் பெற்றி ஞானப், பெருமை
யுடையோர் சிவனைப்பெறுவர் காணே"

என்று அருணந்தி சிவாசாரியார் சிவஞான சித்தியார் 9வது சூம். 22-வது பாட்டிலும் கூறியிருக்கின்றமையறிக. அம்மா அதிசயக் குறிப்பு சொல். ஆசிரியர் இந்தச் செய்யுளில் தமக்கு முருகக்கடவுள் பேரின்ப அனுபூதி நிலையை அருள் செய்ததாகக் கூறுகின்றார்.

(13) முருகன் றனிவேன் முனிநங் குருவென்
றருள்கொண் டறியா ரறியுந் தரமோ
வுருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றெளியன் றெனநின் றதுவே.

(ப---ரை)

| | |
|---|---|
| உருவன்று என (உம்) | தனது சிறப்பியல்பு நிலையில் உருவப் பொருளல்லாதது என்றும் |
| (உருவருவன்று என) (உம்) | - (உருவருவப் பொருளல்லாதது என்றும்) |
| அருவன்று என (உம்) | - அருவப் பொருளல்லாதது என்றும் |
| உளதன்று இலதன்று என (உம்) | - உலகில் காணப்படும் உண்மைப்பொருளும், இன்மைப்பொருளுமல்லாதது என்றும் |
| இருளன்று ஒளியன்று என (உம்) | - உலகில் காணப்படும் இருளாகிய பொருளும் ஒளியாகிய பொருளும் அல்லாதது என்றும் |
| நின்ற அதுவே | - மாறுபடாது என்றும் ஒரு தன்மைத்தான நிலையில் உள்ள அந்தத் தனி முதற்பொருளை. |
| நம்முருகன் என்றும் | - நாம் வணங்குகிற முருகக்கடவுள் என்றும் |
| நம் தனிவேல் முனி என (உம்) | - நாம் நமது மெய்யறிவினாலே உணருகிற ஒப்பற்ற வேற்படையையுடைய முனிவனென்றும் |
| நம் குரு என்றும் | - நாம் அன்பு செய்கிற குருவென்றும் கூறி |
| அருள்கொண்டறியார் | - அவனது அருளைத் துணையாகக் கொண்டு அவ்வருளின் வழியாலுண்டாகும் மெய்யறிவினாலறியாத அடியார்கள் |
| அறியும் தரமோ | - அவனையறிந்து அவனுடைய பேரின்ப அனுபூதியையடையும் தகுதியுடையவர் ஆவரோ. (ஆகார் என்றபடி) |

(வி---ரை)

உருவமும், உருவருவமும், அருவமும், உடையனல்லாத முருகக்கடவுள் பலதர அறிவு நிலையை

யுடைய மாந்தர் தன்னையறிந்து அன்புசெய்து வழிபட்டு உய்யும்படி உருவமும், உருவருவமும், அருவமுமாகிய மூன்று திருமேனிகளையும் தடத்தமேனிகளாகக் கொண்டு அவற்றினிடமாக அதிட்டித்து நின்று அவர்களுக்கருள் செய்கின்றான். செய்யுளிற் கூறப்படாத உருவருவமும் இனம் பற்றிச் சேர்த்துக்கொள்ளப்பட்டது. உரு, உருவரு, அரு என்ற மூன்றினுள் உலகப்பொருள்களெல்லாமடங்குவன. அவன் உருவத் திருமேனியை புறத்தே வழிபடும் தகுதி யுடைய சரியையாளர்களுக்காகவும், உருவருவத் திரு மேனியை புறத்திலும், அகத்திலும் வழிபடும் தகுதியுடைய கிரியையாளர்க்காகவும், அருவத்திருமேனியை அகத்தில் வழி படும் தகுதியுடைய யோகிகளுக்காகவும் கொண்டு அருள் செய்கின்றான். கொண்டாலும் அவன் அவற்றால் யாதொரு விகற்பமுமடையாது அவற்றைக் கடந்து தன்னியல்பில் நிற் கின்றானாதலின் உருவன்று, (உருவருவன்று,) அருவன்று என்றார். மெஞ்ஞானிகள் அவனை எங்கும் நிறைந்திருக்கிற அறிவாக வழிபடுகிறார்கள். இறைவனது பொதுவியல்பு, சிறப்பியல்பு, பாகுபாடுகளையும் அரும்பு, மலர், காய், கனி போல் மாந்தர் பக்குவமடைதலுக்கு அமைக்கப்பட்டிருக் கும் சரியை முதலிய நான்கு வழிபாட்டு முறைமைகளையும் பதமுத்தி, பரமுத்தி வேறுபாடுகளையும் ஒரு சிறிதுமறியாத சமயிகளும் கொள்கையர்களும் இக்காலத்தில் உருவவழி பாட்டை அதனுண்மையறியாது பழிக்கின்றார்கள். உருவ மயமாயிருக்கிற உலகில் உடலுருவில் விளங்குகிற உயிர்கள் உருவருவங்களிலன்றி வழிபட்டு பக்குவமடைய முடியா தென்ற வுண்மை அவர்களறிந்திலர்.

திரோதானசத்தி வயப்பட்ட உலகில் உளது, இலது என்ற இரு எதிரிடைக் கருத்துக்களும் ஒன்றையொன்று அவாவி நிற்குமாதலால் உலகத்தைக் கடந்து என்றும் ஒரு தன்மைத்தாயுள்ள தனி உண்மைப் பொருளுக்குப் பொருந்தாதென்பார் உளதன்று, இலதன்று என்றார்.

"இல்லதும் உள்ளது மாயன்றும் அண்ணலே"

என்று திருமூலர், திருமந்திரம் 2335-வது பாட்டில் இக் கருத்தைக் கூறியிருத்தலறிக. (இங்கே இல்லதும், உள்ளது மாய் என்று கூறியது இறைவனுடைய பொதுவியல்பை) திரோதானசத்தி வயப்பட்ட உலகிலுள்ள ஒளியும், இருளும் ஒன்றுக்கொன்று எதிரிடைப் பொருள்கள் உலகிலுள்ள எவ்வொளியிலும் இருள் சிறிதாயினும் கலவாததில்லை. இந்த வுண்மையை இக்காலத்து மேல்நாட்டு ஒளி நூல் வல்லாரும் ஒப்புகின்றனர். இவ்வுண்மைக்கு மாறாக வைனாசிகர் இருளென்பது ஒளியினதின்மையேயன்றி தனித்ததோர் பொருளன்று எனக் கூறி மயக்குவர். பல்கோடி ஞாயிறுகளும் சேர்ந்து விளங்கும் ஒளிக்கு மேலான தனிப்பேரொளிப் பொருளாகிய தனி அறிவுப்பொருளை இருளென்றுவது, ஒளியென்றுவது கூறுதல் தகாதென்பார் இருளன்று ஒளியன்று என்றார்.

ஒளியிருள் கண்டகண் போலவே றுயுள்
ஒளியிருள் நீங்க வுயிர்சிவ மாமே

என்று உலகத்தில் காணப்படும் ஒளி, இருளைப்பற்றி திருமூலர், திருமந்திரம் 1819-வது பாட்டுக் கூறுதல் காண்க. ஒளியென்பதற்குப் பின்வருகிற என என்ற சொல்லை உருவன்று என்பது முதலிய ஒவ்வொரு சொற்றொடருக்கும்

கூட்டுக. நின்றது என்பதில் அகரம் தொக்கது. நிற்கின்ற என முக்காலத்துக்கும் பொதுவாய் நிகழ்காலத்தில் கூறற்பாலது இயல்புபற்றி நின்ற என இறந்தகாலத்தாற் கூறப்பட்டது. அது என்பது அது நீயாஞய் என்னும், பேருரை (மகாவாக்கியம்) யினுள்ள சொல்லாய் முருகனுகிய முதற் பொருளைக் குறிக்கிறது. நின்றதுவே என்பதிலுள்ள ஏ அசை. செய்யுளின் முதலாவது அடியில் கூறப்பட்ட முருகனது சிறப்பியல் ஒருவர் அவனேடு இரண்டற ஒற்றுமைப் பட்டு நின்றுணரும் தன்மையதாதலின் 'அருள்கொண்டறியாரறியும் தரமோ' என்றார். குரு என்பதற்கு முன் வருகிற நம் என்ற சொல்லை முருகன் என்பதறகு முன்னும் தனிவேல் என்பதற்கு முன்னும் கூட்டுக. வேற்படை மெய்ஞ்ஞான சத்தியைக் குறிக்கிறது. முனிதல்---ஐம்பொறிகள் வழியாகச் செல்லும் ஐந்து அவாவினையும் வெறுத்தல். முருகன் பொறிவாயிலைந்தவித்த மெய்ஞ்ஞானபண்டிதனுதலின் 'தனிவேல் முனி' என்றார். முருகன் என்பது என்றுமுள்ள உண்மைப் பொருள் (சத்துப்பொருள்) என்பதையும், தனிவேல் முனி என்பது முற்றறிவுடைய அறிவுப்பொருள் (சித்துப்பொருள்) என்பதையும், குருவென்பது அடியார்களுக்குக் குருவாய் நின்றுணர்த்தி யின்பமளிக்கும் இன்பப்பொருள் (ஆனந்தப் பொருள்) என்பதையும் குறிக்கின்றன. முருகனே உண்மை யறிவின்பமாகிய (சச்சிதானந்தம்) சொரூப இலக்கணத்தை கூறி அடியார்கள் அவனுடைய வியாபகமான வேட்கை யறிவு செயலுக்குள், தங்களுடைய வியாப்பியமான வேட்கை யறிவு செயலை யடங்கச் செய்து தன்முனைப்பின்றி அவனருளைத் துணையாகக் கொண்டு வழிபடுவாரானல் அவனுடைய

பேரின்ப அநுபூதியைப் பெறுவார்களென்பது இச்செய்யுளின் கருத்து. தாமோ என்பதிலுள்ள ஓ வினா எதிர்மறைப் பொருள் தந்து நின்றது. ஆசிரியர் இச்செய்யுளில் முருகனுடைய சிறப்பியல்பை, அவனருளைத் துணையாகக் கொண்டு அறிந்த மெய் அடியார்கள் அவனுடைய பேரின்ப அநுபூதியைப் பெறுவார்களென்று கூறியருளினர்.

(14) கைவாய் கதிர்வேன் முருகன் கழல்பெற்
றுய்வாய் மனனே யொழிவா யொழிவாய்
மெய்வாய் விழிநா சியொடுஞ் செவியாம்
ஐவாய் வழிசெல் லுமவா வினையே.

(ப—ரை)

மனமே — (முருகனுடைய திருவடி யநுபூதியை யடைதற்கு என்னோடு ஒற்றுமைப் பட்டு நில்லாமல் பிணங்கி நிற்கின்ற) மனமே

செவி, மெய்விழி, வாய் நாசி, ஐவாய் — செவி, மெய். கண், வாய், மூக்கு என்னும் ஐம்பொறி வாயில்களின்

வழி செல்லும் அவாவினை — வழியாக புறத்தே ஓசை, ஊறு, ஒளி சுவை, நாற்றம் என்னும் ஐம்புலன் களாகிய உலக விடயப் பொருள்களை நுகர விரும்பும் அவாவினை

ஒழிவாய் ஒழிவாய் — முற்றிலும் தவிர்ப்பாயாக.

கைவாய் — தனது பன்னிரண்டு கைகளில் ஒரு கையில் சிறந்து விளங்குகிற,

கதிர்வேல் முருகன் கழல் —ஞானஒளியோடு கூடிய வேற்படையை யுடைய முருகக் கடவுளுடைய திருவடி யின்பத்தை,

பெற்று உய்வாய் —அவனது அருளினாலே பெற்று பிறவித் துன்பத்தினின்று நீங்கி உய்வாயாக.

(வி---ரை)

மாணிக்கவாசக அடிகள் "யென் சித்தத்தா றுய்ந்தவா றன்றேயுன் றிறனினைந்தே" என்றும் (திருவாசகம் திருவே சறவு 4வது பாட்டு) "நெஞ்சின் மன்னி யானாகி நின்றானே" என்றும் (திருவாசகம், உயிருண்ணிப்பத்து 9வது பாட்டு) "நம்புமென் சிந்தை நணுகும்வண்ணம் நானணுகும்" (திருவாசகம், குலாப் பத்து 6-வது பாட்டு) என்றும் கூறியபடி ஐம்பொறிவாயில்களின் வழியாய் புறத்தே ஐம்புல விடயங் களிற் சென்று பற்றும் மனத்தை, அப்பற்றை விடுத்து முருகனுடைய திருவடிகளைப் பற்றும்படி செய்து அம்மனம் தன்கருத்துக் கிசைந்து தன்னுள்ளடங்கி நிற்ப, ஒருவர் முருகனுடைய திருவடி யனுபூதியை யடைய வேண்டி யிருத்தலால் உலகப் பற்றில் வீழ்ந்துழலும் மனத்தோ டிணங்கி வாழும் மக்களுக்கு அறிவுரை கூறும் பொருட்டு ஆசிரியர் தம்மேல் வைத்து அத் தன்மையுடைய மனத் தைப் பார்த்து விளித்து இச் செய்யுளைக் கூறுகின்றார். மேலே 'கெடுவாய் மனனே' என்னும் முதற்குறிப்புடைய 7-வது பாட்டில் ஆசிரியர் கூறியதற்கும் இதுவே கருத்து. அவாவென்பது எனக்கு இந்த நுகர்வுப் பொருள் வேண்டு மென்று ஒருவருடைய மனத்திலெழும் விடயப்பற்று.

இவ் விடயப்பற்றுக்குக் காரணம் யானெனெ மதிக்கும் ஆங்காரமும், அவ்வாங்காரத்திற்குக் காரணம் உலகப் பொருளைத் திரியக்காணும் அவிச்சை யெனப்படும் மயக்கமுமாகும். எனக்கு இந்த நுகர்வுப் பொருள் வேண்டுமென்னும் அவாவினது காரியப் புறத்தே அப் பொருளினிடத்துச் செல்லும் ஆசையும், அவ்வாசை நிறைவேறாதவிடத்து அதன் மறுதலையாகிய வெகுளியு முண்டாகின்றன. ஆகவே ஐவாய் வழிசெல்லும் அவாவென்று கூறியதினாலே காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்னும் ஐந்து கஞ்சுக வுடலோடு கூடிய புருடன் உலக நுகர்வுகள் நுகருதற்கேதுக்களாயுள்ள மயக்கம், அகங்காரம், அவா, ஆசை, வெகுளி என்ற ஆணவமலத்தின் காரியங்களாகிய பஞ்சக்கிலேசங்களும் கூறப்பட்ட வாறுயிற்று. இதுபற்றி திருவள்ளுவனுர் கற்றவர் என்பர் அவாவற்ருர் என்று கூறினுர். (திருக்குறள் 365-வது பாட்டு) புருடன் உலகபோக நுகருதற் கிடமாயுள்ளது ஐம்புலப் பொருளை பெயர், சாதி, குணம், கன்மம், பொருள் என்பவற்ருேடு கூடிய சவிகற்பக் காட்சியால் நிச்சயிக்கும் புத்தி தத்துவமாகும். இந்த சவிகற்பக் காட்சி, புருடனுக்கு புத்திதத்துவத்தில் நிகழுவதாயினும், முதற்கண் மனத்தின் தொழிற்பாடு ஏதுவாக வைத்து முறையே வருதல் பற்றி ஆகுபெயரால் மானதக் காட்சி யெனப்படும் (சிவஞான பாடியம் கழகப்பதிப்பு பக்கம் 201). இந்த புத்தி தத்துவக்காட்சி யாகிய மானதக்காட்சியையே ஆசிரியர் இச்செய்யுளில் மனம் என்று கூறுகிருர். இந்த மனமே புருடனை முருகனுடைய திருவடியைச் சேரக்கருதும் ஆன்மாவோ டிணங்க வொட்டாது, அதனை உலக நுகர்வுப் பொருள்களினிடத்து ஈர்த்துச் செல்லுகின்றது.

இங்ஙனம் இம்மனம் ஐம்பொறிகளின் வழியாய் புறத்தி லுள்ள நுகர்வுப் பொருள்களினிடத்து புருடனை ஈர்த்துச் செல்லா திருத்தற்கு, அது உடல்நிலையாமை, செல்வப் பொருள் நிலையாமை, சிற்றின்பச் சிறுமைகள் ஆகிய இவற்றை அறிவு நிலையினுணர்ந்து பிரகிருதி மாயைக்குச் சம்பந்தப்பட்ட பஞ்சக்கிலேசக்குற்றங்களிலிருந்து நீங்கி அசுத்தமாயையி லுள்ள புருடனோடு ஒற்றுமைப் பட்டு ஆன்மாவின் கருத்துக்கிணங்க ஒழுகும்பொழுது இருவினை யொப்பும், மலபரிபாகமும், சத்திநிபாதமும் அடையப் பெற்று சுத்தமாயையிலுள்ள அந்தக்கரணங்க ளொன்று பட்ட மன்மனமாகிறது. இந்த மன்மனம் தெளிவுறுசிந்தை யென்றுங் கூறப்படும். அப்பொழுது இந்த மன்மனத் துள்ளே ஐம்புல நுகர்வுகளில் செல்லும் கீழ்மனமானது ஒடுங்கி விடுகின்றது.

"மன்மனத் துள்ளே மகிழ்ந்திருப் பார்க்கு
மன்மனத் துள்ளே மனோலய மாமே"

(திருமூலர், திருமந்திரம் 620-வது பாட்டு) ஆசிரியர் இந் தச் செய்யுளில் முருகன் கழல் பெற்றுய்வாய் மனமே ஒழி வாய், ஒழிவாய் என்றதனாலே ஐம்புல நுகர்விற் செல்லும் தமது கீழ்மனத்தை மேலே கூறப்பட்டபடி முருகனுடைய திருவடிகளையே சிந்தித்துக்கொண்டிருக்கும் மன்மனமாகும் படி கூறுகின்றார்.

இதனாலே ஒருவருடைய மனமே அவர் உலகவாழ்வுச் சிற்றின்பத்தில் உழன்று வருந்துதற்கும், பேரின்பமடைதற் கும் கருவியாயுள்ள தென்பது புலப்படும்.

(15) முருகன் குமரன் குகனென் றுமொழிந்
துருகுஞ் செயறந் துணர்வென் றருள்வாய்
பொருபுங் கவரும் புவியும் பரவுங்
குருபுங் கவவெண் குணபஞ் சரனே.

ப--ரை)

| | |
|---|---|
| பொரு | - (உலகநுகர்வு நுகருதற்குப் புறத்தே,) ஐம்புலங்களிடத்தே (உலகவிடயங்களினிடத்தே) செல்லும் கீழ் மனம் ஐம்பொறிகளோ டெதிர்த்துப்) போர் செய்யும், |
| புங்கவரும் புவியும் | விண்ணுலகிலுள்ள வானவரும், மண்ணுலகிலுள்ள மாந்தரும், |
| பரவும் | - தன்முனைப்பின்றி புகழ்ந்து துதிக்கும், |
| குருபுங்கவ | - சிறந்த குருமூர்த்தியே, |
| எண்குண பஞ்சரனே | - தன்வயத்தனாதல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், முற்றுமுணர்தல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை வரம்பிலின்பமுடைமை ஆகிய எண்குணங்களும் இருக்குமிடமா யுள்ளவனே, அதாவது எண்குணங்களையு முடைய சச்சிதானந்தப் பொருளே. |
| முருகன் குமரன் குகன் என்று | - முருகன் என்றும், குமரன் என்றும், குகன் என்றும் நின்னுடைய திருப்பெயர்களை (அவற்றின் பொருளுணர்ந்து) கூறி |

உருகும் செயல்தந்து - அங்ஙனம் கூறுதலினாலே எனது மன் மனம் நின்மேலுள்ள அன்பினாலே கரைந்து கரைந்து உருகுகின்ற செயல் உண்டாகும்படி செய்து)

உணர்வு என்று அருள்வாய் - (அச்செயலினாலே நின்னுடைய திருவடி யநுபூதியை யடைதற் கேதுவான) மெய்யுணர்வை எப்பொழுது எனக்குநல்கி அருள்வாய்

நின்னுடைய திருவடி யனுபூதியை நானடையும்படி இப்பொழுதே எனக்கு மெய்யுணர்வு தந்தருளல் வேண்டு மன்பது குறிப்பெச்சம்.

(வி---ரை)

பொரு - முக்காலத்திற்கும் பொதுவான வினைத் தொகை. போர்செய்யும் - ஈண்டு அது முருகனுடைய திருவடிகளை யடையவிரும்பும் அடியார் அவ் விருப்பத்திற்குத் தடையா யிருக்கும் கீழ் மனம் ஐம்பொறிகளோடெதிர்த்து நின்று வெல்லும் என்னும் பொருளில் வந்தது. முருகக்கடவுள் குருக்களுக் கெல்லாம் குருவாயிருத்தலின் குருபுங்கவ என்றார். கீழ்மனம் ஐம்பொறிகளோடு போர் செய்துவென்று பக்குவ மடைந்த வானவர்களுக்கும், மாந்தர்களுக்கும் முன்பாக முருகன் குருமூர்த்தியாய்த் தோன்றி அருள்செய்தலால் பொருபுங்கவரும் புவியும் பரவும் குருபுங்கவனென்றார். பஞ்சரம் - இடம் எண்குணபஞ்சரன் எண் குணங்களுக்கு மிருப்பிடமாக உள்ளவன் அதாவது எண் குணங்களையுடையவன்; எண்குணங்களும் சத்து, சித்து, ஆனந்தம் என்னும் முருகனுடைய மூன்று சொரூபங்களிலடங்குவதால் சச்சிதாநந்தப் பொருளாய் யிருப்பவன் என்று பதவுரையில்

பொருள் கூறப்பட்டது. எண்குணங்களைப் பற்றி மேலே 2-வது செய்யுளில் கூறிய விளக்க வுரையைக் கொள்க. குமரன் என்பது என்றும் இளமையோடிருப்பவன் என்னும் சத்தையும், முருகன் என்பது அறிவென்னும் அழகுடையன் என்ற பொருளில் சித்தையும், குகன் என்பது அடியார்களுடைய இருதயமாகிய குகையில் வீற்றிருந்து பேரின்பமளிப்பவனென்ற பொருளில் ஆநந்தத்தையுங் குறிக்கின்றன. அடியாரொருவர் முருகனோடிரண்டறக் கலந்து இன்புறுதற்கு தமது மனத்தில் அவனுடைய சிறப்பியல்பாகிய முச் சொருபங்களையுமறிந்து அன்பினாலுருகிக் கரைந்துணர்ந்து மெய்யுணர்வு பெறவேண்டுதலின் முருகன், குமரன், குகன் என்றுமொழிந் துருகுஞ் செயறந் துணர்வென்றருள்வாய் என்றார். உணர்வென்பதிங்கே ஒருவர் முருகனோடு இரண்டறக் கலந்தடையும் மெய்யுணர்வு.

உள்ளம் உருகில் உடனாவர் அல்லது
தெள்ள அரியரென் றுந்தீபற
சிற்பரச் செல்வரென் றுந்தீபற

என்று திருவியலூர் - உய்யவந்த தேவர் திருவுந்தியார் 7வது- பாட்டில் உள்ளம் (மனம்) அன்பினாலே கரைந்துருகி இறைவனோடு இரண்டறக் கலந்து இன்புறுதலைக் கூறியிருத்தல் நோக்குக. என்றருள்வாய் என்றதனாலே காலம் நீட்டிக்காது இப்பொழுதே அருளல்வேண்டுமென்பது குறிக்கப்பட்டது.

(16) பேரா சையெனும் பிணியிற் பிணிபட்
டோரா வினையே னுழலத் தகுமோ
வீரா முதுசூர் படவே லெறியுஞ்
சூரா சுரலோ கதுரந் தரனே.

(ப---ரை)

| | |
|---|---|
| முதசூர்பட | - நெடுங்காலம் அசுரர்களை ஆண்டு அரசு புரிந்து வந்த சூரபன்மனை உருவம் மாறி நிலையழியும்படி, |
| வேல் எறியும் சூரா | - அவன்மேலே வேற்படையை யெறிந்த போர்வீரனே, |
| வீரா | - வெற்றியாளனே, |
| சுரலோகதுரந்தரனே | - (அங்ஙனம் சூரனைபோரில் வென்றதனாலே) வானவர் உலகத்தைக் காத்தளித்த வல்லவனே, |
| வினையேன் | - வினையிலே கிடந்து அழுந்தும் அடியேன், |
| ஓரா | (உலகநுகர்வு நிலையில்லாததென்றும் இன்பவமைதியைக் கோடாதென்றும்) ஆராய்ந்தறிந்து (அதனாலே புறப்பற்றற் றிருத்தலும்) |
| பேராசை என்னும் பிணியில் | - (எனது மனம் உலக நுகர்வுப் பொருளின்மேல் செல்லும்) அகப் பற்றாகிய பெருவிருப்ப மென்னும், கட்டிலே |
| பிணிபட்டு ழலத் தகுமோ | - அகப்பட்டுக் கொண்டு, உனதுதிருவடியை யடைதல் வேண்டுமென்றும் எனது மனம் நிலைமாறிச் சுழலுதல் தக்கதாகுமா (தக்கதாகாதென்றபடி) |
| | (எனது அகப்பற்றைக் கெடுத்து நின்னுடைய திருவடிகளிலேபற்றுவைத்து உய்யும்படி அருள் செய்வாயென்பது குறிப்பெச்சம்.) |

(வி---ரை)

உலகில் வாழ்ந்து வந்த அநுபவப் பயனுக உலக வின்ப நுகர்வுநிலை யில்லாததென்றும், இன்ப வமைதியைக் கொடாததென்றும் அறிந்து முருகக் கடவுளுடைய திருவடிகளில் பற்று வைத்திருக்கும் ஒருவன், தான் புற ஐம புல நுகர்வுப் பொருள்களை விடுப்பினும் தனது மனத்தில் பழைய நினைவு வந்து தாக்கி அப்பொருள்களின்மேல் ஐம் பொறிகளின் வழியாய் பற்றுவைத்து உழலுகின்றுன். இவ் வனம் தன் மனம் உழலுதலினின்று நீங்கும்படி அவன் முருகக் கடவுளை வேண்டுகின்றுன். நூலாசிரியர் அவனுடைய நிலையை தனது நிலையாக வைத்து அவனுக் கறிவுரையாக இச் செய்யுள் கூறுகின்றுர். இந்த நிலையிலுள்ள மக்கள் முருகக் கடவுளை வணங்கி, வேண்டுதல் செய்து அவன் திருவடி யனுபூதியை யடைந்து உய்தல் வேண்டும் என்னுங் கருத்துடன் இச் செய்யுளை ஆசிரியர் கூறுகின்றுர். இந்த மனநிலையை திருஞானசம்பந்த அடிகள்,

"ஆபுளின்பா லன்புசெய்வா ளுநரிக்கின் றதுள்ளம்
மாயமாய காயந்தன்னு ளைவர் நின் ழுென்றலொட்டார்"

என்று திருவலிவலப்பதிகம் 7-வது பாட்டிலும், திருநாவுக்கரசு அடிகள்,

"மாறுகந் தின்வண நாளும் நணுகுமா கருதியேயும்
ஊறுகந் தோம்பு மாயே னுள்ளுற ஐவர் நின்றுர்"

என்று திருஆவடுதுறைப் பதிகம் 2-வது பாட்டிலும் கூறியருளினமை காண்க. முதஞூர்படவே லெறிந்த சூராவென்றதனுலே சூரனுக்குச் சூரனுச் சூரனைப் போரில் வென்றதோடு தனது ஞான சத்தியால் அவனுடைய அறியாமையை நீக்கி ஆண்டருளினமையும் கூறப்பட்டது.

சுரலோக துரந்தா னென்றது முருகக் கடவுள் சூரபன் மனைப் போரில்வென்று வானவர்களைச் சிறைமீட்டு, தேவேந்திரனை வானுலகில் அரசாள வைத்த செய்தியைக் குறிக்கிறது. புறப்பற்றற்றாலும், அகப்பற்று நீங்காத விடத்து வினைநீங்காதாதலின் வினையேன் என்றார்.

"நோக்கியிது புரியாதோர் புறப்பற்றற்றாலும் நுழைவர் பிறப்பினின்வினைக ளுங்கிடாவே,, என்று சிவஞானசித்தியார் 8 வது சூத்திரம் 35 வது பாட்டுக் கூறுதல் காண்க. ஓரா என்பது இங்கே செய்யா வென்னும் வாய்பாட்டு, இறந்தகாலவினை யெச்சமெனக் கொண்டு பொருள் செய்யப்பட்டது. அதனை எதிர்மறை வினைப்பெயரெச்சமாகக் கொள்ளின் உலக வின்ப நுகர்வை நிலையில்லாததென்று அறியாத வொருவன் தன் மனம் அதில் உழல்வதை அறியானாதலின் அவ்வுரை பொருந்தாது. மயக்கம், அகங்காரம், அவா, ஆசை, வெகுளி, என்னும் பஞ்சக்கிலேசங்களுள் ஒன்றாகிய ஆசை இங்கே குறிக்கப் பட்டது. இந்த ஆசையானது எனக்கிந்த நுகர்வுப் பொருள் வேண்டுமென்று மனத்தில் எழுகின்ற அவாபற்றி அந்நுகர்வுப் பொருள்மேல் செல்லும் பற்று ஆகும். மேலே 14-வது பாட்டில் அவாவுக்கு எழுதிய விளக்க வுரையை இதற்குங் கொள்க. பேராசை யென்பதை வினைத்தொகையாகக் கொண்டு முருகனுடைய திருவடிகளில் ஆசைவைத்தலை விட்டு இடம்மாறி உலக நுகர்வுப்பொருள் மேல்வைக்கும் ஆசை என்று பொருள் கொள்ளினும் அமையும். இங்ஙனம் பொருள் கொள்ளுங்கால் பெயர்தல் என்பது இடம் பெயர்தல் அதாவது நிலைமாறுதல். உழலல் என்பது சிந்தை

9

தெளியாதிருத்தலால் முருகனே மெய்ப்பொருளென்னும் உறுதி பிறவாது சிந்தை மயங்குதலாகும்.

"நின்னருள் வெள்ளமீதிலே யானென்ப தறவுமூழ்கிச் சிந்தைதான் தெளியாது சுழலும் வகை யென்கொலோ" (தாயுமான சுவாமி பாடல், தேசோமயானந்தம் 3-வது பாட்டு) என்று தாயுமான சுவாமிகள் கூறுதல் காண்க. தகுமோ என்னும் வினு தகாது என்ற பொருளில் வந்தது. இதனுல் உலக நுகர்வுப்பொருள் மேலே, எனது மனம் உழன்று கொண்டிருத்தலை நீக்கி அருளல் வேண்டும் என்று வேண்டிக் கொள்ளுதல் குறிப்பாக வுணர்த்தப் பட்டது. உலக நுகர்வுப் பொருள்களின் மேலே ஒருவனுடைய மனம் சென்று பற்றுதலாகிய அகப்பற்று முருகக் கடவுளுடைய திருவடி யனுபூதியை யடைதற்கு தடையாயுள்ளதென்பது இச்செய்யுளில் கூறப்பட்டது. இந்த உண்மையை ஆசிரியர் பின்வருகிற 4[illegible]-வது பாட்டிலும்,

ஆசா நிகளந் துகளா யினபின்
பேசா வநுபூதி பிறந்த துவே.

என்று கூறுதல் காண்க.

—*!!*—

(17) யாமோ திியகல் வியுமெம் மறிவுந்
தாமே பெறவே லவர்தந் ததனுற்
பூமேன் மயல்போ யறமெய்ப் புணர்வீர்
நாமே நடவீர் நடவீ ரினியே.

(ப—ரை.)

யாமோதிய கல்வியும் - முருகனுடைய அடியார்களாகிய நாம் அருள் நூல்களைக் கற்றதனாலும் (கேட்டதினாலும் சிந்தித்ததினாலும்) உண்டாகிய கல்வியறிவாகிய கருவி யறிவையும்

எம் அறிவும் - (அருட்குரவனால் அறிவுறுத்தப் பட்ட உபதேச மொழிகளைக் கேட்டும், சிந்தித்தும், தெளிந்தும், நிட்டை கூடியதனால் யாம் முருகனோடு அத்துவிதமாய்க் கலந்து உணர்ந்த) எமது மெய்யறிவும்

வேலவர் தாமே - மெய்யறிவு வேற்படையை கையிலேந்திய முருகப் பிரானே.

பெறதந்ததனாலே - நாம் அடையும்படியாக அருளிச் செய்ததனாலே

பூமேல் - உலகத்தைப் பற்றி வாழுதற்கு ஏதுவாகிய

மயல்போயற - மயக்கமானது நம்மை விட்டு நீங்கி (அதன் வாசனையும்) ஒழிதலால்

மெய்ப்புணர்வீர் - மெய்ப்பொருளாகிய முருகனோடு அத்துவிதமாய்க் கலந்து இன்புறும் வேட்கையையுடைய அடியார்களே.

நடவீர் நடவீர் - அவன் திருவடிகளை யடைதற்கு விரைந்து செல்வீர்களாக.

இனிநாமே செல்வோம் - (செல்லுதற்குப் பருவமில்லாதவர்கள் நிற்க) நாமே இனிச் செல்வோமாக.

(வி---ரை)

கல்வியென்பது இங்கே காரணவாகுபெயராய்க் கல்வியறிவைக் குறிக்கிறது. இந்தக் கல்வியறிவு ஒருவன்

முருகனுடைய போதவியல்பை யறிதற்குரிய கல்வியறிவு (பாசஞானம்) ஆகும். ஓதல், கற்றல், ஓதியவென்பது காரணப்பொருட்டாய் *ஓதியதனாலுண்டாகும் என்னும் பொருள்படவந்தது. இனம்பற்றி ஓதியதனைக் கேட்டலும், சிந்தித்தலுங் கொள்ளப்படும். எம்மறிவு என்பது முருகனோடு அத்துவிதமாய்க்கலந்து நின்று அவனை உணரும் மெய்யறிவாகும். இது முருகனுடைய சிறப்பியல்பை யறிதற்குரிய மெய்யறிவு. போதவியல்பு அறிவு முருகனுக்கு வேறாய்நின்றறியும் அறிவாதலால் யாமோதியகல்வி யென்றும், சிறப்பியல்பு அறிவு முருகனோடு இரண்டறவொன்றாய் நின்றுணரும் அறிவாதலால் எம்மறிவென்றும் ஆசிரியர்கூறினார். கருவியறிவு வளர்ந்து பெருகி மெய்யறிவைத் தொடங்குதலுக்கு ஏதுவாகிறது. மெய்யறிவு நேரேவீட்டின்பத்திற்கேதுவாகிறது. மாந்தருக்கு இந்த இருவகையறிவும், முருகன் அவர்கள் கேளாது தாமே உள்நின்றறிவித்தலாலுண்டாதலால் வேலவர்தாமே தந்ததனாலென்றார். தாம் - அசை; ஏ - தேற்றம் உணர்த்துகிறது. பூமேல் மயல் என்பது உலகவாழ்வில் பற்றுவைத்து வாழும்படி செய்கிற மயக்கவறிவு. இந்த மயக்கவறிவு விபரீத வுணர்வென்றும், அவிச்சை யென்றும், மயக்கம் என்றும் கூறப்படும். இது ஆணவமலத்தின்காரியம் இந்தமயக்கம்பற்றி அவாவும், அவாப்பற்றி ஆசையும், ஆசைபற்றி வெகுளியு முண்டாகின்றன. இவ்வைந்தும் பஞ்சக்கிலேசங்களென்று கூறப்படும். இவ்வைந்தும் வாசனையோடு முற்றிலும் நீங்கினாலொழிய நிலையாத பொய் உலகவாழ்வுப் பற்று நீங்கி முருகனுடைய திருவடிப் பற்றுண்டாகாதாதலின் பூமேல் மயல்போயற மெய்ப்புணர்வீர் என்றார். அற

வென்பது காரணப் பொருட்டாய் வந்த செயலென்னும் வாய்பாட்டு இறந்த காலவினை யெச்சம். அறுதல் என்பது மெய்யைப் புணர்தலுக்குக் காரணம் என்னும் பொருட்டாய் வந்தது. மெய்யென்பது என்றும் ஒரு தன்மைத் தானநிலையிலுள்ள மெய்ப்பொருளாகிய முருகனுடைய திருவடி நிறைவி லடங்கிச் சிவபோதமற்று பேரின்ப முறுதல். புணர்வீர் என்று அடியார்களை நோக்கி எதிர்காலத் தாற் கூறப்பட்டமையால் புணர்தற்கு வேட்கை யுடைய அடியார்களே என்று பொருள் கூறப்பட்டது. புணர்வீர்-எதிர்காலத் தெரிநிலை வினையா லணையும் விளிப்பெயர். நடவீர் நடவீர் என்னும் அடுக்குத் தொடர் விரைவுப் பொருள் குறிக்கிறது. ஆசிரியர் தம்மோடுகூட முருகனுடைய திருவடியை யடையும் பொருட்டு வருதற்கு அடியார்களை விளித்துக் கூறுகின்றார். நாமே என்பதிலுள்ள ஓ, பிரிநிலைப் பொருள் குறித்து வந்தது. பிற மக்கள் கூட்டத்திலிருந்து பிரித்து பேரின்பச் சுவையறியும் பக்குவமுடைய அடியார்களைத் தம்மோடுடன் சேர்த்து நாமே என்று கூறினார். நாமே என்பதற்குப் பின், செல்வோம் என்பது அவாய் நிலையாய்த் தொக்கி நின்றது. இது இசையெச்சம்.

நிற்பார் நிற்கநில் லாவுலகி னில்லோ
மினிதாஞ் செல்வோம்
பொற்பாலொப்பாந் திருமேனிப் புயங்கனாள்வான்
பொன்னடிக்கே
நிற்பீரெல்லாந் தாழாதே நிற்கும் பரிசே
யொருப்படுமின்
பிற்பா லின்று பேழ்கணித்தாற் பெறுதற்கரியன்
பெருமானே.

என்று மாணிக்கவாசக அடிகள் இந்தக் கருத்தை திருவாசகம், யாத்திரைப் பத்து, 7-வது பாட்டில் கூறியிருத்தல் காண்க. இந்நூல் 28-வது பாட்டில் ஆசிரியர் கூறியவாறு தாமடைந்துள்ள முருகன் திருவடி யனுபூதி நிலையை படையுமாறு பக்குவமுடைய அடியார்களை நோக்கி விளித்து இச்செய்யுளைக் கூறுகின்றார். எங்கும் நிறைந்துள்ள முருகன் திருவடி யனுபூதிநிலை சென்றடையாச் செல்வநிலையாயிருப்பினும் ஆசிரியர் இனி நாம் செல்வோம் என்று உலகர் பேசும் மொழியில் கூறுகின்றார். சிவஞான போதம் 11-ம் சூத்திரத்திலும் "அயரா அன்பின் அரன் கழல் செலுமே" என்று கூறப்பட்டிருத்தல் போல இச்செய்யுளிலும் அந்நிலை கூறப்படுகின்றது.



(18) உதியா மரியா வுணரா மறவா
விதிமா லறியா விமலன் புதல்வா!
அதிகா வனகா வபயா வமரா
வதிகா வலசூ ரபயங் கரனே.

(ப---ரை)

உதியா (து - உம்) மரியா (து - உம்) பிறவாமலும் இறவாமலும்,
உணரா (து - உம்) மறவா (து - உம்) நினையாமலும் மறவாமலும்,
விதிமாலறியா (து - உம்) நான்முகனும் மாலும்தேடிக் காணாதவனுமாயிருக்கிற,

| | |
|---|---|
| விமலன்புதல்வா | சிவபெருமானுடைய (ஆறு நெற்றிக்கண்களினின்றும்) தோன்றியபுதல்வனே, |
| அதிகா | - எல்லா உயிர்களுக்கும் மேலானபொருளே, |
| அனகா | - அறவாளனே |
| அபயா | - (நினது திருவடிகளையே புகலிடமென்று நின்னை வணங்கும் அடியார்களுடைய) பிறவி யச்சத்தை நீக்குகிறவனே |
| சூரபயங்கரனே | - போரிலே சூரபன்மனை அஞ்சும்படி செய்து அவனை வென்றவனே, |
| அமராவதி காவலா | - விண்ணுலகத்திலுள்ள வானவர்களை காத்தருளினவனே, |
| (போற்றி) | - நினது (திருவடிகளுக்கு) வணக்கம். |

முருகக் கடவுளே எனது பிறவி யச்சத்தை நீக்கி என்னைக் காத்தருளி உனது திருவடியனுபூதியைத் தந்தருள வேண்டுமென்பது குறிப்பெச்சம்.

(வி---ரை)

உதியா, மரியா, உணரா, மறவா, அறியா வென்ற சொற்களின் ஈற்றிலுள்ள 'து' ஐந்தும் கெட்டன. 'து'

என்பதனேடு 'உம்' என்ற இடைச்சொல்லைச் சேர்த்துக் கொள்க. உதியா, மரியா வென்றதனுலே எல்லா வுயிர்களுக்கும் தாயும், தந்தையுமாயிருக்கிற சிவபெருமான் தனக்குத் தாய், தந்தையில்லாதவன் என்பதும், என்றும் உள்ள உண்மைப் பொருள் (சத்துப்பொருள்) என்பதுங் கூறப் பட்டன.

"தாயுமிலி தந்தையிலி தான்தனியன் காணேடி"

என்று மாணிக்கவாசக அடிகள் திருவாசகத்தில் கூறுதல் காண்க. (திருச்சாழல் 3-வது பாட்டு)

உணரா, மறவா வென்றதனுலே சிவபெருமான் இயற்கை யுணர்வினன் என்பதும் அறிவுப் பொருள் (சித்துப் பொருள் என்பதும் கூறப்பட்டன. விதிமாலறியா வென்றதனுலே எல்லா வுயிர்களுக்கும் மேலான முழுமுதற் கடவுள் என்பது கூறப்பட்டன. விமலன் என்றது அனுதியே மலமில்லாதவன்; இதனுல் சிவபெருமான் இன்பப் பொருள் (ஆனந்தப் பொருள்) என்பது கூறப்பட்டது. விமலன் என்ற சொல்லிறுதிவரையில் முன்னிரண்டடிகளும் சிவபெருமான் உண்மை யறிவின்பப்பொருள் (சச்சிதானந்தப் பொருள்) என்பது கூறப்பட்டது. அத்தகைய சிவபெருமான் புதல்வன் என்றதனுலே, அவன் ஆறுநெற்றிக் கண்களினின்றும் உலகம் உய்யும் பொருட்டுத் தோன்றிய முருகப் பிரானும், அவனைப்போல உண்மை யறிவின்பப் பொருளென்பது குறிக்கப்பட்டது. முருகப்பிரான் சிவபெருமானது கருத்துப்படி சூரபன்மனுடைய வலியையடக்கி வானவர்களைக் காத்தருளினவன் என்பார்.

"சூரபயங்கரனே, அமராவதி காவல" என்றார். பயங்கரன் என்பது பயத்தைச் செய்கிறவன். முருகப்பிரான் சூரபன் மனுக்கு அவன் பேரில் வைத்த அன்பினாலே விஸ்வரூபக் காட்சி கொடுத்து வழி காட்டியும் அவன் அக்காட்சி நீங்கிய வுடனே தன்னுடன் போர் செய்யத் தொடங்கிய பின் அவனை யஞ்சும்படி செய்து வேற்படையினாலே வென்று அடக்கி ஆட்கொண்டமையினாலே, சூரபயங்கரனே என்றார். அங்ஙனம் சூரபன்மன் முதலிய அசுரர்களை யடக்கி வானவர்களைக் காத்தருளுதற்கு முருகப்பிரான் ஆற்றலும், அருளுமுடையவனென்று குறிக்கும் பொருட்டு அதிகா என்றும், அனகாவென்றும் கூறினார். அனகா வென்பது பாப மில்லாதவன் அதாவது அறவாளன். அத்தகைய முருகப்பிரான் தன்னிடம் அடைக்கலம் புகுந்த அடியார்களுடைய பிறவித் துன்பத்தை நீக்கிக் காத்தருளுவன் என்று குறிப்பிப்பார், 'அபயா' வென்றார். பின்னிரண்டடிகளால் "அசுரர்களை அடக்கி யாளுதற்கும், வானவர்களைக் காத்தற்கும், ஆற்றலும், அருளுமுடைய நீ, நினது திருவடிகளையே தஞ்சம் என்று வணங்கும், எனக்கு எனது மல வலியை நீக்கி, நினது திருவடிப் பேரின்பத்தைத் தந்தருளல் வேண்டும்" என்று அடிகள் குறிப்பினால் கூறியவாறாயிற்று. முருகப்பிரான் தன்னுடைய திருவடிகளே தஞ்சம் என்று நினைந்து மெய்யன்போடு வணங்கும் அடியார்களுடைய பிறவித் துன்பத்தை நீக்கித் தனது திருவடிப் பேரின்பத்தை யவர்களுக்குத் தந்தருளுவன் என்பது இச்செய்யுளின் கருத்து.



19. வடிவுந் தனமும் மனமுங் குணமுங்
குடியுங் குலமுங் குடிபோ கியவா!
அடியந் தமிலா வயில்வே லரசே!
மிடியென் றொருபா விவெளிப் படினே.

(ப---ரை)

| | |
|---|---|
| அயில்வேல் | — மெய்ஞ்ஞான மாகிய கூர்மையான வேற்படையைக் கையிலே தாங்கியுள்ள |
| அடியந்தமிலா அரசே | — முதலும், முடிவுமில்லாத முழுமுதற் கடவுளே |
| மிடியென் றொருபாவி | — (முற்பிறப்பில் அறத்தின் வழியொழுகி நல்வினை செய்ததன் பயனாக இப் பிறப்பில் செல்வ மடைந்த வொருவனிடம் அவன் செல்வச் செருக்கினால் மிக்க தீவினை செய்தல் காரணமாக) இன்மை (வறுமை) என்று கூறப் பட்ட ஒரு பாவி |
| வெளிப்படின் | — எவருங் காணும்படித் தோன்றினால் |
| தனமும் | — அவனைவிட்டுச் செல்வம் நீங்குதலோடு |
| மனமும் | — அச்செல்வ நீக்கம் பற்றி முன் அவனுக்கு உளவாயிருந்த அறஞ்செய்யும் மனப்பான்மையும் |
| வடிவும் | — உடலழகும் |
| குடியும் | — உயர் குடிப்பிறப்புத் தன்மையும் |
| குணமும் | — சுற்றத்தார் முதலியவர்கட்கு ஈதலாகிய குணமும் |
| குலமும் | — சுற்றத்தார் முதலியவர்கள் கூட்டமும் |
| குடிபோகிய ஆறு | — ஆகிய ஐந்து நலன்களும்அவனைவிட்டு நீங்கும் முறைமையினைப் போல |

முற்பிறப்பிற் செய்த தவப்பயனாக இப்பிறப்பில் நின்னுடைய அனுபூதியாகிய பேரின்பத்தை விரும்பி, நின்னுடைய திருவடியில் பற்று வைத்தொழுத மடியாரொருவர், அத்திருவடியாகிய அருளில் உறைத்து நில்லாது, பழைய வாசனைத் தொடக்கினால் அவ்வருளை மறந்து உலக நுகர்வு விருப்பத்தில் நழுவுவாராயின் அவ்வருட் செல்வத்தினோடு அவர்க்கு முன் உளவாயிருந்த, திருவடியில் உறைத்து நிற்கும் மன்மனமும், உயிரில் விளங்கும் அருளொளியும், ஆண்டவனாகிய நின்னிடம் வைத்திருக்கும் அடிமைத் திறமும், எவ்வுயிரும் தன்னுயிர் போல் எண்ணும் அருட் பண்பும் நின்னுடைய மெய்யடியார் கூட்டமும் ஆகிய ஐந்து நலன்களும் முறையே ஒன்றன்பின் ஒன்றாய் நீங்கி விடும்.

நான் நினது திருவடி யனுபூதியை யடைய எனது மன்மனம் நினது திருவடிப் பற்றில் உறைத்து நிற்கும்படி அருள் செய்தல் வேண்டு மென்பது குறிப்பெச்சம்,

(வி---ரை)

அரசன், இங்கே, உலகில் உயிர்களை ஆண்டருளும் முழுமுதற் றலைவன் என்னும் பொருளில் வந்தது. முருகப்பிரான், எல்லா உயிர்களும் பிறவித் துன்பத்தினின்று நீங்கித் தனது திருவடியை யடைதற்கு, தனது மெய்ஞ்ஞானமாகிய அருளினாலே வேண்டுவன செய்து கொண்டிருத்தலால் அவனை அடியந்தமிலா அயில் வேலரசே என்று விளித்தார். மிடி என்பது இன்மை. இது தீவினையின் பயனாக விளைவது. நல்வினை தீவினைகளால் முறையே விளையும் உண்மை, (செல்வம்) இன்மைகளாலாகும் உலக வாழ்வில் உண்மை கீழ்ப்பட்டு அடங்கி, இன்மை மேற்பட்டுத் தோன்றுமாதலின் மிடியென்று ஒரு பாவி வெளிப்படினே

என்றார். வெளிப்படினே என்பதிலுள்ள 'ஏ' அசை. தீவினைப் பயனாக இன்மையால் விளையும் கொடுமை நோக்கி, பண்பைப் பாவி யென்னும் பண்பியாக உருவகஞ் செய்து மிகுதிப் படுத்திக் கூறினார்.

"இன்மை யெனவொரு பாவி மறுமையு
மின்மையு மின்றி வரும்."

என்றும்,

"அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்."

என்றும், திருவள்ளுவர் இங்ஙனம் கூறியது நோக்குக. குடி போகுதல்---இடம் பெயர்ந்து செல்லுதல் குடிபோகிய ஆறு என்பது குடிபோகிய ஆ என ஈறு கெட்டது. ஆறு என்பது முறைமை. ஆறு என்பதற்குப் பின் உவமைப் பொருள் குறிக்கும் ஐந்தாம் வேற்றுமை இல் உருபு விரித்துரைக்க. தனம் ஒருவனை விட்டுப் பெயர்ந்து செல்லவே அதனோடு மனமும், வடிவும், குடியும் குணமும், குலமும் ஆகிய ஐந்து நலன்களும் நீங்குதலால் தனமும், மனமும், வடிவும், குடியும், குணமும், குலமும் குடிபோகிய வா வென்றார். இவை முறையே ஒன்றுக் கொன்று ஏதுவும் பயனுமா யுள்ளன. செய்யுளாதலால் இவற்றை முறை பிறழ்ந்து கூறினார். செல்வம் ஒருவனை விட்டு நீங்கவே இவ் வைந்து நலன்களும் அவனைவிட்டு நீக்குதல் உலக வாழ்வு நடை முறையில் எவரும் கண்கூடாய்க் காணும் அனுபவக் காட்சி. ஆசிரியர் உலக மக்களறியும்படி இந்த அனுபவக் காட்சியை உவமையாகக் கூறி, உவமை குறிக்கும் பொருளைக் கூறாது அவர்கள் உய்த் துணரும்படி வைத்தார். இங்ங

னம் பொருளை உய்த்துணர வைத்தல் தமிழ்ச் செய்புள் வழக்கு. உய்த்துணரும் பொருள் பதவுரையில் கூறப்பட்டது. உவமை யென்பது அறிவிக்கப்படுவா னொருவனுக்கு, அவனறியாத பொருளொன்றனை, அவனறிந்த பொருளொன்றை அறிவிப்பா னொருவன் உவமையாக வைத்து விளக்கிக் கூறுவது. இங்கே ஆசிரியரா லறிவிக்கப்படும் பொருள், அவர் தாமுணர்ந்த பேரின்ப வுணர்வு. உரையினாற் கூறப்படாத அவ்வுணர்வினை அறியாத மக்களுக்கு ஆசிரியர் கூறும் உவமைப் பொருள் உலக வின்பம். உலக வின்பமும், பேரின்பமும் நிலையளவில் ஒப்புமையுடையது. இரண்டுக்கு முள்ள வேற்றுமையோ கடலினும் பெரிது. ஆயினும் இவ்வுவமையைக் கொண்டுதான் பேரின்ப மின்னதென்றறியாத உலக மக்களுக்கு அதனை உணர்ந்த ஆன்றோர் விளக்கிக் கூறவேண்டுமே யொழிய வேறு வழியில்லை. இது பற்றி தமிழ் மொழியில் பிற எம் மொழியினு மில்லாத அகத்துறைப் பொருளிலக்கணம் கூறப்படுகின்றது. இந்த உவமான உவமேயங்களில் அற வழியில் உலக நுகர்வுப் பற்று வைக்கும் பிரகிருதி மாயையிலுள்ள கீழ் மனத்துக்கு முருகனது திருவடியில் பற்று வைத்திருக்கும் சுத்தமாயையிலுள்ள மன்மனமும், உடலில் சத்துவகுண மிகுதிப் பாட்டால் விளங்கும் அழகுக்கு உயிரில் அருளினால் விளங்கும் ஒளியும், உடலில் சத்துவகுண மிகுதிப் பாட்டால் விளங்கும் உயர்குடிப் பிறப்புத் தன்மைக்கு, உயிரின்கண் அருளால் விளங்கும் அதனடிமைத் திறமும், உடலில் விளங்கும் சத்துவ குணத்துக்கு உயிரில் விளங்கும் அருட்பண்பும், உடல் நலத்தைப் பற்றிவரும் சுற்றத்தார் கூட்டத்திற்கு உயர் நலத்தைப் பற்றிவரும் அடியார் கூட்ட

மும் முறையே ஒன்றுக்கொன்று உவமைகளாயினவா றறிந்துகொள்க. உவமானப் பொருளிலுள்ள ஐந்து நலன்களும் உயிரோடு கூடிய பிரகிருதி மாயை உடலினிடத்து உயிரினது அருள் வழித்தாய அறத் தன்மையால் விளங்குவதை உவமேயப் பொருளில் உள்ள ஐந்து அருள் நலன்களும் முருகனோடுகூடி சுத்த மாயையில் விளங்கும் உயிரினிடத்து முருகனது அருள் விளக்கத்தால் விளங்குவனவாகும்.

> அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
> கிவ்வுலக மில்லா கியாங்கு.

என்று திருவள்ளுவர் கூறுகிறபடி உலகில் காணப்படும் ஐந்து பொருள் நலன்களும் அருளுடையவரன்றி ஏனையோரால் காணப்படாத வைத்து அருள் நலன்களுக்கு உவமைகளாயின. மேலே 14-வது 16-வது பாட்டுக்களில் முருகனது திருவடி யனுபூதியை யடைதற்கு முறையே ஐம்புல நுகர்வு அவாவும், ஐம்புல நுகர்வு ஆசையும் தடைகளாயுள்ளன வென்று கூறிய ஆசிரியர், இப்பாட்டில் முருகனது திருவடிப்பற்றில் மன்மனம் உறைத்து நில்லாது பழைய வாசனை பற்றிப் பொதுவாக உலக நுகர்வு விருப்பத்தில் நழுவுதல் முருகனுடைய திருவடி யனுபூதிக்குத் தடையாயுள்ளதென்று கூறுகின்றார். இதனாலே ஆசிரியர் முருகனது அடியார்களுக்கு முருகனது திருவடியையே எப்பொழுதும் நினைந்து கொண்டிருத்தல் வேண்டுமென்று அறிவுரை கூறிய வாறுமிற்று.

—*!!*—

(20) அரிதா கியமெய்ப் பொருளுக் கடியேன்
உரிதா உபதே சமுணர்த் தியவா
விரிதா ரணவிக் ரமவே ளிமையோர்
புரிதா ரகநா கபுரந்த ரனே,

(ப---ரை)

| | |
|---|---|
| விரிதாரணவேள் | — ஒளிவிளங்குகிற பிரணவப் பொருளா யிருக்கிற முருகக் கடவுளே |
| விக்ரம வேள் | — பேராற்றலை யுடைய முருகக் கடவுளே |
| இமையோர் புரிதாரக | — வானவர்கள் (தங்களைத் தானவர்கள் துன்பத்தினின்றும் நீக்குதற்கு) அன்பு செய்கின்ற ஆதாரப் பொருளே |
| நாகபுரந்தரனே | — விண்ணுலகிலுள்ள வானவர்களைத் (தானவர்களுடைய துன்பத்தினின்று நீக்கி) பாது காத்தருளினவனே |
| அடியேன் | — நினக்கு அடிமை பூண்டொழுகும் நான் |
| அரிதாகியமெய்ப்பொருளுக்கு | — அடைதற்கு அருமையான மெய்ப்பொரு ளாகிய நின்னை யடைதற்கு |
| உரிதா(க) | — தகுதியுடையவனுகும்படி |
| உபதேசம் உணர்த்தியவா | — (குருவடிவில் வந்து) அருளுண்மையை எனக்கு அறிவுறுத்தியருளிய ஆண்ட வனே |
| (போற்றி) | — நின் திருவடிகளுக்கு வணக்கம். |

(வி---ரை)

விரி என்பது முதனிலைத் தொழிற் பெயராய் எங்கும் விரிந்து பரந்திருக்கிற அருளொளியைக் குறிக்கிறது. விரியல் பரந்திருக்கிற (விரி---அல்) என்ற சொல்லானது ஒளியைக் குறிக்கும் பெயர்களி லொன்றுக சூடாமணி

நிகண்டு 8-வது பண்பு பற்றிய பெயர்த் தொகுதி 22-வது பாட்டில் கூறப்பட்டிருக்கிறது. தாரணம் என்ற வட மொழிச் சொல் கடவென்று பொருள்படும் தரவென்னும் வடமொழி அடிச் சொல்லிலிருந்து உண்டாகியது. அது இங்கே பிறவியைக் கடத்தற் கேதுவாகிய ஓங்காரமாகிய பிரணவ மந்திரத்தைக் குறிக்கிறது. பிரணவ மந்திரத் தில் அருளொளி விளங்குவதால் விரிதாரண வென்றார்.

"நினைப்போதளவும், ஓங்காரத் துள்ளொளிக் குள்ளே முருகன் உருவங் கண்டு தூங்கார்." என்று ஆசிரியர் கந்த ரலங்காரம் 55-வது பாட்டில் முருகனுடைய ஓங்கார ஒளி ரூபத்தை கூறியிருத்தல் காண்க. முருகக் கடவுளைக் குறிக்கும் வேல் என்ற சொல்லை விரிதாரண வென்பதற்குப் பின்னும் கூட்டுக. வானவர்கள் தாங்கள் தானவர்களா லடைந்த துன்பத்தை நீக்குதற்கு அன்போடு வணங்கிய தாரகப் பொருள் முருகக் கடவுளாதலால் இமையோர் புரி தாரகவென்றார். அங்ஙனம் அன்போடு வணங்கிய வான வர்களுடைய வேண்டுகோளின்படி முருகக்கடவுள் தானவர் களைப் போரில் வென்று வானவர்களைக் காத்தருளியதனால் நாகபுரந்தரனே என்றார். நாகம் என்பது விண்ணுலகம். அது இங்கே இடவாகு பெயராய் விண்ணுலகிலுள்ள வான வர்களைக் குறிக்கிறது. மெய்த்தவ முயற்சியால் ஆகும் மெய்யறிவு முதிர்ச்சியினால் மெய்ப் பொருள் உணரப்பெறு தலால் அரிதாகிய மெய்ப் பொருள் என்றார். உலகத்துப் பொருள்களெல்லாம் நிலையில்லாத பொய்ப் பொருள்களாத லின் ஒருவர், தமது மெய்யறிவினால் பொய்யுலகப் பற்று நீங்கி தமது சிறப்பியல்பு நிலையில் உணரப்பெறும் பொருள்

மெய்ப் பொருளாதலின், மெய்ப் பொருளுக்கு உரிதா உபதேசம் என்றார். முருகன் திருவடிவில் வந்து அருளுண்மையை யறிவுறுத்தினாலன்றி அவனுடைய திருவடியனுபூதி கிடைக்கப் பெறாதாதலின் உரிதாவுபதேச முணர்த்தியவா வென்றார். உரிதாம் என்றது உரிதா எனக் கடைக்குறைந்து நின்றது. உரிதாதல்--தகுதி யுடையதாதல். முருகன் குருவடிவில் வந்து தமக்கு உபதேசப் பொருளை யுணர்த்தியதை ஆசிரியர் மேலே 5, 8, 11-வது பாட்டுக்களிலும் கூறியிருக்கின்றார். உணர்த்தியவன் என்பது விளிப்பெயராய் வரும்பொழுது ஈற்று னகர வொற்றுக் கெட்டு, ஈற்றயல் வகர வுயிர் மெய் நீண்டது. போற்றி என்பது ஈற்றில் இசையெச்சமாய்த் தொக்கி நின்றது.

(21) கருதா மறவா நெறிகா ணவெனக்
இருதாள் வனசந் தரவென் றிசைவாய்
வரதா முருகா மயில்வா கனனே
விரதா சுரசூ ரவிபா டணனே.

(ப---ரை)

வரதா — (நின்னை மெய்யன்போடு வணங்குமடியார்களுக்கு அவர்கள் வேண்டும்) வரமளிப்பவனே

முருகா — முருகக் கடவுளே

மயில்வாகனனே — மயிலை ஊர்தியாகக் கொண்டவனே

விரதா — (அடியார்களைக் காக்கும்) விரதம் பூண்டவனே

சூரா — (தானவர்களைப் போரில் வென்று) வானவர்களைக் காத்தருளிய வீரனே

விபாடணனே — ஒளிப்பொருளா யிருக்கிறவனே

கருதா மறவா நெறிகாண — (நின்னோ டத்துவிதமாய்க் கலந்திருக்கிற எனக்கு நீ உன்னைக் காட்டுவித்தன் மாத்திரையே யன்றி என்னோடும் சென்றியைந்து விடயப் பொருளாகிய நின்னை நான் காணுமாறு நீ கண்டாலொழிய நான் காணமாட்டாமையினாலே) நான் நினையாதும், மறவாதும் காணும் அருளொளியில் நீ என்னோடுடன் சென்றியைந்து நின்னைக் காணும்படி செய்தலால் நான் உன்னைக் காணும்படி

இருதாள் வனசம் எனக்குத் தர — நினது இரண்டு திருவடித் தாமரைகளாகிய அனுபூதிப் பேரின்பத்தை எனக்களிக்க

என்றிசைவாய் — எப்பொழுது இணங்கி அருள் செய்வாய்? அதாவது இப்பொழுதே அருள் செய்தல் வேண்டும்.

(வி---ரை)

வீரம் என்பது அடியார்களைக் காத்தருளல் வேண்டுமென்னும் தீர்மானம், விபாடணம் என்னும் வட மொழிச் சொல் ஒளி விளக்கு என்று பொருள்படும் விபாஸ் என்ற வடமொழிச் சொல்லி லிருந்து பிறந்தது. விபாடணன் என்பது பேரொளியாய் விளங்குகிறவன் என்று பொருள்

படும். பேரொளியால் விளங்குவது முருகனுடைய சொருப நிலை (சிறப்பியல்புநிலை) ஒருவர் மலவிருளோடும், அருளொளியோடும் சேர்ந்துள்ள தம் பொய்யுலக நெறியாகிய பொதுவியல்பு நெறியைக் கடந்து, தம் அருளொளி நிலையாகிய சிறப்பியல்பு நிலையில் மெய்யுணர்வால் வீட்டின்பமுணரப் பெறுதலின் கருதா மறவா நெறிகாண வென்றார். கருதல் - நினைத்தல். நினைத்தலும், மறத்தலும் மலவிருளோடும், அருளொளியோடுங் கூடிய பொதுவியல்புநெறிக்குள்ளனவேயன்றி அருளொளியில் மட்டும் விளங்கப் பெறும் சிறப்பியல்பு நெறிக்கு இல்லையென்பது கருத்து. காட்டுதலாவது பதிப்பொருளாகிய தன்னை ஏனைப் பாசப் பசுக்களுக்கு மேலாதல் இனிது விளங்கச் சிறப்பியல்பு நிலையில் வைத்துணர்த்துதல். இது காட்டு முதவி யென்று கூறப்படும். காணுதலாவது அங்ஙனம் உணர்த்தின பதிப் பொருளானது உயிரினோடும் சென்றியைந்து தன்னை விடயிக்குமாறு அவ்வுயிரினைச் செலுத்தி உணர்தல். இது காணு முதவியென்று கூறப்படும். உயிர் பேரின்பம் நுகருமாறு பதிப்பொருளானது உயிருக்குக் காட்டுமுதவியும் அதன் பின் காணுமுதவியும் செய்தல் வேண்டுமென்னும் துரியாதீதநிலை கூறும். சிவஞானபோதம் 11-ம் சூத்திரக் கருத்து இங்கே கூறப்பட்டது. எங்கும் வியாபகமா யிருக்கிற முருகனே வீட்டின்ப நெறியாயிருத்தலின் நெறி என்ற சொல்லானது இங்கே வீட்டின்பத்தைக் குறிக்கிறது. முருகனே வீட்டின்ப நெறியாக விருத்தலின், "நெறியே நின்மலனே" என்று சுந்தர மூர்த்தி அடிகள் இறைவனை விளித்துக் கூறி யிருத்தல் காண்க. (திருமழபாடிப் பதிகம் 9-வது பாட்டு) கருதா மறவா நெறி என்று

ஆசிரியர் இந்தச் செய்யுளில் கூறியதை இந்நூல் 42-வது பாட்டில் 'குறியைக் குறியாது குறித்தறியும் நெறி' என்று கூறுகின்ருர். ஆசிரியர் அச் செய்யுளில் நெறியைத் தனக்கு முருகன் நிகழ்த்தியதாகக் கூறுகின்ருர். காண வென்பது காரியப் பொருளில் வந்த எதிர்காலவினை யெச்ச மாய் காரணப் பொருளாய் குறிக்கிறதா வென்னும் இறந்தகாலவினை யெச்சத்தைக் கொண்டு முடிந்தது. காணுதலுக்குத் தருதல் காரணம். காணுதல் - உணர்தல். இருதாள் வனசம் தரலென்பது ஆண்டவனுகிய நீ அடிமை யாகிய என் முன் குருவாய் வந்து உபதேசம் செய்தரு ளும் பொழுது நினது திருவடித் தாமரைகளை நினது அடிமையாகிய எனது தலைமேலே வைத்து ஆண்டருளு தலாகும்.

"பிரானுப் அடியேன் மேல் வைத்தாய் நீயே"

என்று திருநாவுக்கரசு அடிகளும் (திருவையாறு திருத்தாண்டகம் 1-வது பாட்டு)

"இணையார் திருவடி யென்றலை மேல் வைத்தலுமே
துணையான சுற்றங்க ளத்தனையும் துறந் தொழிந்தேன்"

என்று மாணிக்கவாசக அடிகளும் (திருப்பூவல்லி 1-வது பாட்டு)

"தாடந்த அளிக்குந் தலைவனே சற்குரு—
தாடந்து தன்னை யறியத் தரவல்லோன்"

என்று திருமூலரும் (திருமந்திரம் 2049-வது பாட்டு)

மலவிருளை நீக்கி அருளொளியை விளக்குமாற்ருல் இறைவன் தனது திருவடிகளை அடியார் தலைமேலே

வைத்து ஆண்டருளுதலைக் கூறியிருத்தல் காண்க. தமது மலவிருளை நீக்கி அருளொளியை விளக்கி ஆண்டருள வேண்டுமென்று வேண்டிக் கொள்ளுகின்ற பக்குவப்பட்ட அடியார்கள் முன், முருகக் கடவுள் நேரில் குருவாய் வந்து அவர்கள் தலைமேலே தனது திருவடிகளை வைத்து தீக்கை செய்து ஆண்டருளிய அனுபூதியாகிய பேரின்பம் தந்தருளுவன் என்பது இச் செய்யுளின் கருத்து.

—*!!*—

(22) காளைக் குமரே சனெனக் கருதித்
தாளைப் பணியத் தவமெய் தியவா
பாளைக் குழல்வள் ளிபதம் பணியும்
வேளைச் சுரபூ பதிமே ருவையே.

(ப---ரை)

| | |
|---|---|
| சுரபூபதி | — விண்ணுலகிலுள்ள வானவரும், மண்ணுலகிலுள்ள மாந்தரும் வணங் |
| | — கும் கடவுளும் |
| மேருவையே | — (அளக்கலாகாத தோற்றமும், தளக்கலாகாத நிலையுமுடைய) மாமேருமலை போன்றவனும் (ஆகிய) |
| பாளைக்குழல் | — கமுகின்பாளை போலும் கூந்தலையுடைய |
| வள்ளிபதம் பணியும் | — வள்ளிநாயகியாருடைய அடிகளை வணங்கும் முருகக் கடவுளை |
| காளையென (உம்) | — கட்டிளமையோடு என்றும் நித்தியமா யிருக்கும் உண்மைப் பொருளென்றும் |

தமரன் என (உம்) — (சிவபெருமானுடைய நெற்றிக் கண்களாகிய ஞானக்கண்களி னின்றும் தோன்றிய) புதல்வ ஞகிய சித்துப் பொருளென்றும்
ஈசன் என (உம்) — உயிரை அடிமையாக ஆண்டரு ளும் ஆண்டவனுகிய இன்பப் பொருளென்றும்
கருதி — (மெய்யன்புடன்) மனத்திலே எண்ணி
தாவளப்பணிய — நின்னுடைய இரண்டு திருவடி களையும் வணங்கும்படி
தவமெய்திய ஆறு — முற்பிறப்பிலே தான் சரியை கிரியை யோகங்களாகிய தவங் களைச் செய்த முறைமையினலே இப் பிறப்பில் நின்னுடைய அனு பூதியாகிய திருவடிப் பேரின் பத்தை யடையும் பெரும்பேறு பெற்றேன் ஆ! இது என்ன வியப்பு.

(வி---ரை)

பதி என்ற வடமொழிச் சொல், காப்பவன் என்று பொருள்படும். சுரபூபதி என்றதனுலே விண்ணவர்களையும், மாந்தரையும் அவர்களுடைய பக்குவம் அறிந்து காப்பதற் குரிய ஞானசக்தி குறிக்கப் பட்டது. வள்ளிநாயகியார் முருகனுடைய இச்சா சக்தியாக விருத்தலால் வள்ளிபதம் பணியும் என்பது உலக நுகர்வில் இச்சைவைக்கும்படி மாந்தருயிர்களுக்கு இச்சையை யூட்டும் இச்சாசக்திக்கு இயைத்து ஒழுகல் ஆகும். அங்ஙனம் மாந்தருக்கு இச்சா சக்தி இச்சையை யூட்டாவிட்டால் மாந்தர் தங்கள் உலக

வாழ்வில் ஐம்புல நுகர்வு இச்சித்தலும், அவ்விச்சையின் வழி ஐம்புலநுகர்வை யறிதலும், அவ்வறிவின் வழி ஐம்புல நுகர்வை நுகர்தலும் செய்து, உலக ஐம்புல நுகர்வு நிலையில்லாத தென்றும், இன்ப வமைதியைத் தாமாட்டாத தென்றும் அறியும் உலகாநுபவத்தை அறிய மாட்டார்கள். அறியாவிடின் அவர்களுக்கு முருகனுடைய அநுபூதி யடைதற்கு இச்சை உண்டாக மாட்டாது.

உயிரிச்சை யூட்டி யுழிதருஞ் சக்தி
உயிரிச்சை வாட்டி யொழித்திடு ஞானம்
உயிரிச்சை யூட்டி யுடனுற லாலே
உயிரிச்சை வாட்டி யுயர்பதஞ் சேருமே.

என்னும் திருமந்திரம் 2336-வது பாட்டில் இவ்வுண்மையை திருமூலர் கூறியருளினர்.

அகப்பொருட்டுறைக் கற்பியலில் தலைவியால் வணங்கப் பெறும் தலைவன் இனி "உன்னிச்சைவழி நடக்கிறேன்" என்று கூறி தலைவியின் பாதத்தை வணங்குதல் தலைவன் தான் யாதாமொரு வினை செய்தற் பொருட்டு தலைவியை விட்டுப் பிரிந்து வினை முடிந்து திரும்பி வந்த பொழுது தலைவியினுடைய உள்ளத்திலுண்டான ஊடலை நீக்கும் பொருட்டாகும். தொல்காப்பியனர் இதனை வழுவமைதி யென்று

காமக் கடப்பினுட் பணிந்த கிளவி
காணுங் காலைக் கிழவோற் குரித்தே
வழிபடு கிழமை யவட்கிய லான

என்னும் பொருளிலக்கணம் 160-வது சூத்திரத்தில் கூறுகின்றார். வள்ளிபதம் பணியும் வேள் என்றதனாலே

முருகனுடைய இச்சாசக்தி குறிக்கப்பட்டது. வேள் என்ற சொல்லுக்கு இச்சை யென்னும் பொருளுமுண்டு. மலையானது அளக்கலாகாப் பொருள் வளமுடையதாத லின் முருகனை மேருமலைக்கு உவமித்தது தன்னை வணங்கி அறநெறிக் குட்பட்டு வாழும் மாந்தருக்கு அவர்கள் வேண்டுமளவு உலக நுகர்வுப் பொருள்களைக் கொடுத்தரு ளும் முருகனுடைய கிரியா சக்தி குறிக்கப்படுகிறது. மலை துளக்கலாகா நிலையை யுடையதா யிருத்தலின் முருகன் தனது பொதுவியல்பு நிலையில் விகாரமடையான் என்ற வுண்மையையுங் குறிக்கிறது. இங்ஙனம் வள்ளிபதம் பணி யும் வேள், சுராபூபதி, மேரு, என்னும் மூன்றும் நிலவுல கத்தில் வாழும் மாந்தருக்கு உலகநுகர்வில் அவர்களோடு ஒன்றாய் நின்று இச்சையை யூட்டி அவர்க ளிச்சிக்கவும், அவர்களுக்கு வேறாய் நின்று அறிவித்து அவர்களறியவும், அவர்களோடுடனாய் நின்று உலக நுகர்விற் செலுத்தி அவர்களதனை நுகரவும் செய்துவரும் முருகனுடைய அத் திதப் பொதுவியல்பு (தடத்தவிலக்கணம்) கூறப்பட்டது. காளைக்குமரேசன் என்பதை காளை என, குமரன் என, ஈசன் என என்று விரித்துரைக்க. என என்பதற்குப் பின் மூன்றுவிடங்களிலும் 'உம்' சேர்க்க. குமரன் ஈசன் என்ற இரண்டு வடமொழிச் சொற்களும் புணருங்கால் நிலை மொழி ஈற்றிலுள்ள னகரவொற்றுக் கெட்டு வருமொழி முதலிலுள்ள ஈகாரம் ஏகாரமாகத் திரிந்து குமரேசன் என ஆகியது. இது வடமொழி குணசந்தி. காளை, என் பது என்றும் நிலையாயுளதாகிய முருகனுடைய உண்மைத் தன்மையையும், குமரனென்பது முருகனுடைய அறிவுத் தன்மையையும், ஈசன் என்பது முருகனுடைய இன்பத் தன்மையையும் குறிக்கிறது.

உண்மயைறி வின்பமாகிய இந்த முச் சொருபமும் முருகனுடைய சிறப்பியல்பாகும். முருகனுடைய இந்த மூன்று சிறப்பியல்பு நிலைகளையும் அடியாரொருவர் அறிந்து தம் மனத்திலே எண்ணி அவனுடைய திருவடிகளைப் பணிந்தாலொழிய திருவடிப் பேரின்பம் அடைய முடியாதாதலின், "காளைக் குமரே சனெனக் கருதித் தாளைப் பணிய" வென்றார். மேலே13-வதுபாட்டில், 'முருகன் குமான் குகனென்று மொழிந் துருகுஞ் செயறந் துணர்வென்றருள்வாய்'' என்று ஆசிரியா கூறுய் கருத்து மிதுவே. முருகன், குமான், குகன் என்ற சொற்களுக்கு அப் பாட்டின்கீழ் எழுதிய விளக்க வுரையையும் பார்க்க. குமான் என்பதற்கு இளையோன் என்று 15-வது பாட்டில் பொருள் கூறப்பட்டது. இந்தப் பாட்டில் அது காளை யென்ற சொல்லுக்குப் பின் வருதலால் அதற்கு சிவபெருமானுடைய புதல்வன் என்று பொருள் கூறப்பட்டது. வேளை, சுரபூபதி, மேருவையே, காளைக்குமரேசனெனக் கருதித் தாளைப் பணிய வென்றதனுலே மாந்தர்களுக்கு அவர்களோ டொன்ருய் நின்று இச்சையை யூட்டியும், அவர்களுக்கு வேருய் நின்றறிவித்தும், அவர்களோடொன்ருய் நின்று நுகர்வித்தலாகிய செயலைச் செய்வித்தும் தனது பொதுவியல்பு நிலையில் அவர்களை உலகவின்பம் நுகரும்படி செய்த முருகக் கடவுளே தனது சிறப்பியல்பு நிலையில் உலக வின்பத்தைக் கண்டு கழிக்கும் பருவம் வந்த மாந்தருக்கு அவர்களோடொன்ருய் நின்று தனது திருவடிப் பேரின்பத்தில் பற்று வைக்கும் இச்சையை யூட்டியும், அவர்களுக்கு வேருய் நின்று அதனை யறிவித்தும், அவர்களோடுடனுய் நின்று

அதனிடத்தில் செலுத்தி நுகர்வித்தும் செய்துவருகின்ற வுண்மை கூறப்பட்டிருக்கின்றது. முருகன் தனது பொது வியல்பு நிலையில் யாதொரு விகாரமு மடையாமல், உயிர்ப் பொருளோடும், உயிரில் பொருளோடும், ஒன்றாயும், வேறாயும், உடனாயும் அத்துவிதமாய் நிற்பது, உயிர்களுக்குப் பக்குவம் வருவித்து அவைகளுக்குத் தனது திருவடிப் பேரின்பத்தை அளித்தற் பொருட்டேயாகும் என்ற சித்தாந்த வுண்மை இச் செய்யுளிற் கூறப்பட்டது. முருகனுடைய பொதுவியல்பு, சிறப்பியல்பு பற்றி மேலே 2-வது பாட்டின்கீழ் எழுதிய விளக்க வுரையையும் அன்பர்கள் ஓதியறிக. தாளைப்பணிதல் என்பது முருகனுடைய திருவருள் நிறைவில் தற்போதமின்றி அடங்கி நிற்றல். அவ்வாறு அடங்கி நிற்றலால் அடங்கி நிற்கிற உயிருக்கும் வியாபக வறிவுண்டாகிறது. தவம் என்பது இங்கே உண்மைச் சரியை, கிரியை, யோகங்களைச் செய்யும் மெய்த் தவம். இம்மெய்த் தவத்தைச் செய்யும் ஒருவருக்கே பேரின்பப் பேற்றுக் கேதுவாகும் மெய்யறிவுண்டாதலால் தவம் எய்திபவாறு என்றார். "மேற்சரியை, கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோக்ஷத்தைக் கொடாவாகலான் இவ்வான்மாக்களுக்கு முற்செய்தவத்தான் ஞான நிகழுமென்று" ஏதுவும், மேற்கோளுமாக சிவஞானபோதம் 8-வது சூத்திரம் முதலதிகாணம் கூறுதல் காண்க. எய்தியவாறு என்பது எய்திபவா வெனக் கடைக்குறைந்து நின்றது. ஆறு என்பது முறைமை. ஆறு என்பதற்குப் பின் ஏதுப் பொருள் குறிக்கும் ஆல் என்னும் மூன்றும் வேற்றுமை யுருபை விரித்துரைக்க. ஆசிரியர் இச்செய்யுளில் தாம்

முற்பிறப்பில் மெய்த்தவம் செய்தமையை ஏதுவாகக் கூறி அந்த ஏதுவின் பயனை வெளிப்படையாகக் கூறுமல் நாம் உய்த்துணரும்படி வைத்தார். ஏதுவின் பயன் இன்னது என்பது இந்நூற் பெயராலும், அவர்தாமே 2, 17, 28, 43 வது பாட்டுக்களில் கூறியவுரைகளாலும் நாமறிந்து கொள்ள பயன் பதவுரையில் கூறப்பட்டது. மேலே 21வது பாட்டில் 'இருதாள் வனசந் தாவென்றிசைவாய்' என்றுகூறிய ஆசிரியர், இச் செய்யுளில் தாம் முற்பிறப்பில் தாளைப் பணியத் தவஞ் செய்ததாகக் கூறுகின்ருர். மெய்த்தவஞ் செய்து மெய்யறிவு பெற்றவர்களே வீட்டின்ப மடைவர் என்பது இச் செய்யுளின் கருத்து.

—*!!*—

(23) அடியைக் குறியா தறியா மையினுன்
முடியக் கெடவோ முறையோ முறையோ
வடிவிக் ரமவேள் மகிபா குறமின்
கொடியைப் புணருங் குணபூ தரனே.

(ப---ரை)

| | |
|---|---|
| வடிவிக்ரம வேல் மகிபா | — கூர்மையும் மிக்க வாற்றலு முடைய மெய்யறிவு வேற்படையைக் கையிலேந்தியுள்ள முழுமுதற்றலைவனே |
| மின்குறக்கொடியைப் புணருங்குண | — ஒளி விளங்குகின்ற குறப் பெண் மகளாகிய வள்ளியம்மையாரோடு சேர்ந்திருக்கிற இச்சாசக்தியுடையவனே |
| பூதரனே | — (பொருள்வளமுடைய அசையா) மலை போன்றவனே |

அடியைக் குறியாது — நின்னுடைய இரண்டு திருவடிகளை யும் (என் மனத்திலே வைத்துத்) தியானம் செய்யாது

அறியாமையினல் — (நினது அனுபூதியையடைதற்கு அத் திருவடிகளே புகலிடமென்று) அறி யாதிருத்தலினலே

முடியக்கெட — (நான் உலக நுகர்விலிச்சை வைத்து, அத்திருவடிகளைப் பற்ருது மறந்து) முழுவதுங் கெடுதல்

முறையோ முறையோ — நீதியாகுமோ, நீதியாகுமோ (நீதியாகா தென்றபடி)

நான் நினது அநுபூதியடைதற்கு நின்னுடைய திருவடிகளையே எனது மனத்தில் எப்பொழுதும் தியானித்துக் கொண்டிருக்கும்படி அருள் செய்தல் வேண்டு மென்பது குறிப்பெச்சம்.

(வி---ரை)

வேற்படையானது மலவிருளோடு செறிந்து மலவுரு வாய்க் கிடந்த கிரௌஞ்ச அவுணனை தூளாகும்படி செய் யத் தக்க கூர்மையையும், பாதாளமுதல் அண்டமுகடு வரையும் நீண்டும், எட்டுத் திசைகளையும் முட்டும்படி அகன்றும் வளர்ந்து மாமரவுருவாய் நின்ற சூரபன்மனைச் சங்காரஞ் செய்யவல்ல வாற்றலு முடைபதாதலின் வடி. விக்ரம வேல் என்ருர். வள்ளிநாயகியார் மலையில் வாழும் குறவர்களுக்கு அரசனகிய நம்பிராசன் வீட்டில் வளர்ந் ததனலே குறக்கொடியென்றும், அந்நாயகியார் முருக னுடைய இச்சாசக்தி ஒளியாய் விளங்குதலாலே, மின் குறக்கோடி என்றும் ஆசிரியர் கூறினர். கொடியென்பது -

கொடிபோல நுடங்கி விளங்கும் நுண்ணிடையை யுடையவள். அன்மொழித்தொகை. குணன் - குணத்தையுடையவன். குணம் என்பது இச்சையாகிய குணம். குணன் என்ற சொல் விளிப்பெயராக மாறும்பொழுது ஈற்று னகரவொற்றுக் கெட்டு குணவென நின்றது. தன்னை யடைந்தவர்களுக்கு வேண்டும் பொருள் வளங்களைக் கொடுக்கிற ஓர் பெரிய மலைபோல, நுகர்வுப் பொருள் விரும்பி, தன்னை வணங்குகிறவர்களுக்கு முருகன் அவர்கள் வேண்டிய நுகர்வுப் பொருள்களைக் கொடுத்தலால் அவனைப் பூதரனே யென்று உருவகம் செய்து விளித்தார். வடிவிக்ரமவேல் மகிபாவென்றதனாலே பொதுவியல்பு நிலையில் முருகனுடைய ஞான சக்தியும், மின்குறக் கொடியைப்புணரும் குணவென்றதனாலே அவனுடைய இச்சா சக்தியும், பூதரனே என்றதனாலே அவனுடைய கிரியா சக்தியும் கூறப்பட்டன. உலக நுகர்வை விரும்பும் மாந்தரோடு முருகன் மூவகையான சக்திகளால் எவ்வாறு ஒன்றாயும், வேறாயும், உடனாயும் அத்துவிதமாய் நிற்கின்றானென்பது மேலே 22வது செய்யுள் விளக்கவுரையிற் கூறப் பட்டது. அடியென்பது இங்கே ஞான சக்தியைக் குறிக்கிற வலது திருவடியும், கிரியா சக்தியைக் குறிக்கிற இடது திருவடியுமாகிய இரண்டு திருவடிகளையுங் குறிக்கின்றன. இச்சா சக்தி ஞான சக்தியின் விசேடமாதலின் ஞான சக்தியிலடங்கும். இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி யென்பன தமிழ் மொழியில் முறையே வேட்கையாற்றல், அறிவாற்றல், செயலாற்றல் என்று கூறப்படும். குறித்கல் என்பது உலக நுகர்வுப் பற்றை முற்றிலும் விட்டு மலச்சார்பில் நழுவாதபடி திருவடிகளையே தியானித்துக் கொண்டிருத்தலாகும். அங்ஙனம் திருவடிகளில்

உரைத்து நின்று தியானியாது பழைய வாசனை பற்றி திருவடிகளை மறந்து நிற்கும் அடியார்களுடைய நிலையை நினைந்து, அந்நிலையைத் தமதாக வைத்து அவர்களுக் கறிவுரையாக ஆசிரியர் இந்தச் செய்யுளைக் கூறுகின்றார். அறியாமை யென்பது இங்கே முருகனது திருவடிகளை ஒருமை மனத்தோடு நினைந்து தியானிக்கு மறிவாற்றலின்மை. கெடவென்னும் வினையெச்சம் இங்கே கெடுவது என்னும் தொழிற் பெயர்ப் பொருளில் வந்தது. கெடவோ என்பதிலுள்ள 'ஓ' அசை. முறையோ முறையோ வென்பதிலுள்ள 'ஓ' வென்னும் வினுகுறிக்கு மிடைச்சொல் முறையாகாது என்னும் எதிர்மறைப் பொருள் தந்து நின்றது. முறையோ முறையோ வென்ற அடுக்குத் தொடர் இரக்க முணர்த்தி நின்றது. முடியக் கெடுதலாவது மாறி மாறிப் பிறந்திறந்து உலகில் வாழும் துன்பத்திற் கேதுவாதல். முருகனைப் பின்னிரண்டு அடிகளில் கூறுமாறு, ஆசிரியர் விளித்து, அறியாமையினுல் முடியக் கெடவோ முறையோ முறையோ வென்றதனுலே, முருகனைப் பார்த்துப் "பொதுவியல்பு நிலையில் நின்னுடைய இச்சாசக்தி, ஞானசக்தி, கிரியாசக்திகளால் என்னோடு மூவகை அத்துவித நிலையில் கலந்திருந்து, எனக்குப் பக்குவம் வருமாறு எனக்கு உலக நுகர்வு நுகர்வித்த நீ, பக்குவம் வந்த பின்னும் என்னோடு சிறப்பியல்பு நிலையில் மூவகையான அத்துவித நிலையில் கலந்து நின்று, நினது திருவடியநுபூதியை நானடையும்படி அருள் செய்ய வேண்டு" மென்று கூறியவாருயிற்று. முருகன் அநுபூதி நிலையையடைய விரும்புமடியார்கள் அவனுடைய திருவடிகளை மறவாது எப்பொழுதும் தியானித்துக் கொண்டிருத்தல் வேண்டுமென்பது இச்செய்யுளின் கருத்து.

(24) கூர்வேல் விழிமங் கையர் கொங்கையிலே
சேர்வே னருள்சே ரவுமெண் ணுமதோ
சூர்வே ரொடுகுன் றுதொளைத் தநெடும்
போர்வே லபுரந் தரபூ பதியே.

(ப---ரை)

போர் —போரில்
சூர் — (மாமரவுருவாய் நின்ற) சூரபன்மனை சங்காரஞ் செய்தலோடு
வேரொடு குன்று தொளைத்த— கிரௌஞ்ச அவுணனாகிய மலையை அடியோடும் தொளைத்த
நெடுவேல் — நீண்ட வேற்படையைக் கையிலே தாங்கியிருக்கிற முருகக் கடவுளே
புரந்தர பதியே — விண்ணுலக வேந்தனாகிய தேவேந்திரனை தேவர்களோடும் காக்கும் தலைவனே
பூபதியே — மண்ணுலக மாந்தரைக் காக்கும் தலைவனே
கூர் வேல் விழி — கூர்மையான வேல்போலும் வருத்துகின்ற கண்களை யுடைய
மங்கையர் கொங்கையிலே — பெண் நுகர்வை நுகர அவர்களுடைய கொங்கைகளை (தனங்களை)
சேர்வேன் — சேர விரும்புகிறவனாகிய நான்
அருள் சேர — நினது அருளாகிய திவடியைச் சேருவதற்கு
எண்ணுமோ — என் மனத்தில் விரும்புவேனோ

(அங்ஙனம் விரும்பா திருத்தல் இயல்பாயினும் நான் நினது திருவடியைச் சேர விரும்பி நின்னுடைய அநுபூதியை யடைந்தது,

KOVILOOR ANDAVAR LIBRARY, KOVILOOR A. No. 25957

நீ என்மேல் வைத்த பெருங் கருணையினாலே குருவடிவாய் வந்து அறிவுறுத்தித் தடுத் தாண்டமையினாலேதான்)

உலக வாழ்வில் சிற்றின்ப விருப்பங்கொண்டிருந்த வென்னை நினது திருவருளினாலே தடுத்தாட்கொண்டு நினது திருவடி யனுபூதிப் பேற்றிற்கு ஆளாகும்படி செய்தாய் என்பது குறிப்பெச்சம்.

(வி---ரை)

புரந்தர பூபதி யென்பதனை புரந்தரபதி, பூபதி யென விரித்துப் பொருளுரைக்கப் பட்டது. கூர்வேல் விழி யென்னும் உவமைத் தொகை போர் வீரர், போரில் பகை வர்களை வருத்தும் கூர்மையானவேல் போலும், மங்கையர், ஆடவரை வருத்தும் நீண்ட விழியென உவமானம், உவமேயமும் விரியும். இது பயனுவமை. கொங்கையிலே-கொங்கைகளை வேற்றுமை யுருபு மயக்கம். சேர்வேன் என்னும் எதிர்காலத்தெரிநிலை வினையாலணையும் பெயர் சேர விரும்புகிறவனாகிய நான் என்னும் பொருள்பட வந் தது. சேரவும் என்பதிலுள்ள உம் அசை. சேர்தல் என்பது சேர்ந்து நுகர்தல். என்னும் அத்து என்பது எண்ணும் அதுவென அதுவிலுள்ள இடையெழுத்துக் கெட்டது. அத்து சாரியை. எண்ணுமோ என்பது எதிர்காலத்தெரிநிலை வினைமுற்று. 'ஓ' எதிர்மறைப் பொருள் தந்து நின்றது. சேர்வேன் எண்ணுமோ வென்பதை இலக்கண வழுவமைதி யாகக் கொள்க. எண்ணுத லென்பது இங்கே விரும்புதல் என்னும் பொருளில் வந்தது. விரும்புதல், இச்சித்தல் இரண் டும் ஒரு பொருளன. விருப்பத்தின் வழி அறிவு சென்று செயல் நிகழுதலால் அருளைச் சேர விருப்பம் மனத்தி லெழாத விடத்து அருளைச் சேர்தலு முண்டாகாது.